# சின்டுவின் விருப்பம்



ஒவ்வொரு முறை குளிப்பாட்டும் போதும் ஏன் அழுகிறான் என்று தெரியவில்லை. வெதுவெதுப்பான நீரைத் தான் உபயோகிக் கிறேன்.

சின்டுவை, அவனது அம்மா ஒரு சாதாரண சோப்பினால் குளிப்பாட்ட, அவன் கோபத்தால் கத்துகிறான்.



வேறொரு சோப்பைப் பயன் படுத்திப் பார்! சோப்பை அவனே தேர்ந்து எடுக்கட்டும்!




சின்டு கடையிலுள்ள அனைத்து சோப்புகளையும் பார்க்கிறான்.

சரியாகத் தேர்ந்து எடுத்துள்ளான் அம்மா! மைசூர் சாண்டல் பேபி சோப் சந்தன, பாதாம் எண்ணெயை உள்ளடக்கியது. அது சருமத்திற்கும் நல்லது.





கடந்த 80 ஆண்டுகளாக சந்தனத்தின் நற்குணத்தை உங்கள் இல்லத்திற்குக் கொண்டு வருகிறது மைசூர் சாண்டல் சோப் நிறுவனம்










PIRANHA



ACTIVE



CADET HX



YANKEE



ROBO COP

Heroes start early.

Ride, race, take a tumble or even take a fall.

Because it's never too early to be a hero.



# சந்திரகிரி கோட்டை

**- திருப்பதி அருகில்...**

**விஜயநகர சாம்ராஜ்யம் தெலுங்கும் கன்னடமும் பேசப்படும் பரந்த வெளிகளில் மூன்று நூற்றாண்டுகள் பரவி இருந்தது வரலாற்றில் ஒரு மைல் கல்லாகும். இம்மன்னர்கள் பல கலைகளை ஆதரித்தும் தெலுங்கு இலக்கிய வளர்ச்சியை முதிரச் செய்ததற்கும் காரணமாக இருந்தவர்கள்.**

**விஜயநகர சாம்ராஜ்ய மன்னர்கள் ராயர்களென அழைக்கப்பட்டனர். அவர்களை மரியாதையுடன் ராயலவாரு (ராயர் அவர்கள்) என்று கூறி வந்தார்கள். பன்மையில் இவ்வாறு குறிப்பது அவர்களது மேன்மையைக் காட்டுவதாம்.**




திருப்பதியிலிருந்து 12 கி.மீ. தொலைவில் ஸ்வர்ணமுகி நதிக்கரையில் சந்திரக் கோட்டை உள்ளது. இதுதான் விஜயநகர மன்னர்களின் கடைசித் தலைநகர். இக்கோட்டையில் விஜயநகர சாம்ராஜ்யத்தின் ஏற்றமும் தாழ்வும் என்ற ஒலி-ஒளிப்பதிவுக் காட்சிகள் மனதில் பதியும் வகையில் காட்டப்படுகின்றன.

விஜயநகர சாம்ராஜ்யம் தென்னிந்தியாவிலேயே மிகப்பெரிய நாடாக விளங்கியதாகும். இப்பகுதியின் வரலாற்றையும் வீரச்செயல்கள் நிறைந்த கதைகளையும் திரு. அமிதாப்பச்சன் தம் வெண்கலக் குரலில் கணீரென ஒலிக்க விளக்கும் ஒலி-ஒளி காட்சிகளை இங்கு யாவரும் அவசியம் பார்க்க வேண்டும். ஆந்திரப் பிரதேச சுற்றுலா முன்னேற்றக் கழகம் இதனை ஏற்பாடு செய்துள்ளது. குழந்தைகள் முதல் முதியோர் வரை கண்டு களிக்கும் காட்சிகள் இவை.

ஆந்திரப் பிரதேசத்தின் ஒரு பகுதி தற்போதும் ராயல சீமா எனக் குறிப்பிடப்படுகிறது. இதன் பொருள் 'ராயர்கள் நாடு' என்பதாம். விஜயநகர மன்னர் களில் கிருஷ்ணதேவர் பெயரும் புகழும் பெற்ற சக்தி வாய்ந்த மன்னராகத் திகழ்ந்தார்.

விஜயநகர சாம்ராஜ்யம் தக்காணப் பீடபூமியில் முகம்மது பின் துக்ளக்கின் ஆட்சி வலு இழந்தபோது அமைந்தது. மூன்று வம்சங்கள் இப்பேரரசை ஆண்டன. அவற்றில் கடைசி வம்சம் துளு இனம். கிருஷ்ண தேவராயர் *(1509-1530)* கிருஷ்ணா நதிக்கும் துங்கபத்திரா நதிக்குமிடையே உள்ள பகுதியைக் கைப் பற்றி கீழ் கடற்கரை, ஒரிஸ்ஸா ஆகிய பகுதியிலுள்ள அரசர் களை எதிர்த்துப் போராடினார்.

இன்று சந்திரகிரிக் கோட்டை பாழடைந்திருந்தபோதிலும் ராணி மஹலிலும், ராஜ மஹலிலும் உள்ள அரண்மனைகள் புதுப்பிக்கப்பட்டு ஆந்திரப் பிரதேச சுற்றுலாத் துறை இவற்றை ஒளிபடச் செய்துள்ளது. இக்கோட்டையில் பல கோயில்கள் உள்ளன.

குறிப்பாக அறிய வேண்டிய ஓர் உண்மை என்னவென்றால் கடைசி விஜயநகர மன்னர் 'சென்னபட்டண' என்ற ஒரு சிறு நிலப்பகுதியை பிரிட்டிஷாருக்குத் தானம் கொடுத்ததாகச் செய்து கொண்ட உடன்படிக்கையாம். அந்த நிலப்பகுதி 'மதராஸ்' என்றாகி தற்போது 'சென்னை' என்ற பெயரில் உள்ளது. ஆங்கிலேயர்கள் இப்பகுதியில் செயின்ட் ஜார்ஜ் கோட்டையைக் கட்டி கிழக்கிந்தியக் கம்பெனி வாயிலாக வியாபாரத்தைத் தொடங்கி நம் நாட்டைக் கைப்பற்ற அடிகோலினார்கள். துங்கபத்திரா நதிக்கரையில் ஹம்பியில் தம் தலைநகரை அமைத்து மாபெரும் விஜயநகர சாம்ராஜ்யம் முடிவில் ஆங்கிலேயரிடம் சரணடைந்தது விந்தையிலும் விந்தை தான்.

## விஜயநகர விழா

**(அக்டோபர் மாத மூன்றாவது வெள்ளி, சனி, ஞாயிறு)**

திருப்பதிக்கு அருகிலுள்ள சந்திரகிரிக் கோட்டை

வரலாற்றுச் சிறப்புமிக்கதாய் விஜயநகர மன்னர்களின் மேன் மைக்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறது. ஒலி-ஒளிக் காட்சிகள் காட்டப்படும் இங்கு, இவ்விழா திருமலைக் கோவிலில் வருடாந் திர பிரம்மோற்சவம் நடக்கும்போது வருகிறது. இங்கு பிரபல பாடகர்கள் நடனக் கலைஞர்கள் நடத்தும் நிகழ்ச்சிகளையும் இங்கு ரசிக்கலாம். மேலும் ராயலசீமா உணவு விழாவும் இதே சமயம் நடத்தப்பட்டு மிகச் சுவையான இந்த வட்டாரப் பழங் கால உணவு முறைப்படித் தயாரிக்கப்பட்டு வழங்கப்படுகிறது.

Central Reservation Offices at: Tirupati: T.P. Area, Beside Venkateswara Bus Station, Ph: 08574-55385, 55386, Mobile: 98480-07033; Fax: 08574-56877; Tirumala: 08574-70055; Nellore: H.NO.24, I/1613, 1st floor, Opp. Kasturba Kalakshetram, Police Office Road, Dargha Mitta. Ph: 0861-306089; Hyderabad: Opp. BRKR Bhavan, Tank Bund Road, Ph: 040-3453036, 3450165 Fax: 040-3453086; Secunderabad: Yatrinivas Complex, S.P. Road, Ph: 040-7893100, 7816375; Vijayawada: Hotel Ilapuram Complex, Gandhi Nagar, Ph: 0866-570255, 523966; Visakhapatnam: LIC Building, Daba Garden, Ph: 0891-746446, Fax: 713135; Kurnool: APTDC Divisional Office, C/D-6, C-Camp, Nandyal Road, Telefax: 08518-70104; Nagarjunasagar: 08680-77364, 76540; Srisailam: 08524-88311; Warangal: 08712-459201, 446606.






ANDHRA PRADESH TOURISM DEVELOPMENT CORPORATION

For Round the Clock Tourist Information on A.P. Dial: 1901-334033 from Hyderabad / Secunderabad & 0901-334033 from other places in India.



இந்தியப் புராதனக் கதைகள்

24



முற்றும் துறந்தவர்

19



மர்மக்குளம்

11



விநாயகர்

45

## பொருளடக்கம்






SUBSCRIPTION

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**
***Remittances in favour of Chandamama India Ltd.***
to
Subscription Division
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony,
Ekkatuthangal, Chennai - 600 097
E-mail : subscription@chandamama.org

**பரிசளிப்புச் சந்தா**
இந்தியாவைத் தவிர மற்ற எல்லா நாடுகளுக்கும் விமானத்தபால் வாயிலாக
பனிரெண்டு இதழ்களுக்கு ரூ 900
இந்தியாவிற்குள் ரூ 120
**புக்போஸ்டில்**
உங்கள் சந்தாத்தொகையை டி.டி வாயிலாகவோ அல்லது மணி யார்டரிலோ சந்தமாமா இந்தியா லிமிடெட் என்ற பெயரை எழுதி அனுப்பவும்.

இப்பத்திரிகையில் விளம்பரங்களை வெளியிடத் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

**சென்னை**
Ph : 044-234 7384
234 7399
**e-mail : advertisements@chandamama.org**

**டில்லி**
மோனா பாட்டியா
Ph : 011-651 5111
656 5513/656 5516

**மும்பை**
ஷகீல் முல்லா
Mobile : 98203-02880
Ph : 022-266 1599
266 1946/265 3057



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# வன்முறைக்கு இடமே இல்லை!

அண்மையில் குடியரசுத் தலைவராகப் பதவி ஏற்ற டாக்டர். அப்துல் கலாம் மதசார்பின்மையைக் கடைப்பிடித்து நம் நாட்டை உயர்நிலைக்குக் கொண்டுவர வேண்டுமென்ற தம் கருத்தை வெளியிட்டார். முன்னாள் குடியரசுத் தலைவர் திரு கே.ஆர். நாராயணனும் மக்கள் மத சகிப்பினை மனதில் கொள்ள வேண்டுமென வலியுறுத்தினார்.

எந்த மதமும் வன்முறைகளை ஆதரிக்கவில்லை என்பது எல்லோரும் அறிந்ததே. ஆட்சியைக் கைப்பற்ற ஆசைப்படுபவர்களும் சுயநலம் கொண்ட மதவெறியர்களும் அப்பாவி மக்களிடையே பயத்தையும் பீதியையும் கிளப்பிவிடுகிறார்கள். ஒரு மதத்தைச் சார்ந்தவர்கள் மற்றொரு மதத்தைச் சார்ந்த தொழிலாளர் குடியிருப்பில் இருந்த முப்பத்தேழு பேர்களைப் படுகொலை செய்தது கண்டு நாடே அதிர்ந்து போயிற்று.

அதே நாளில் அதே மதத்தைச் சார்ந்தவர்கள் தொலைதூர இங்கிலாந்தில் கிரிக்கெட் விளையாடிய போது தம் தாய்நாட்டிற்கு அமோக வெற்றி கிடைக்கப் பெருமுயற்சி செய்தார்கள். நம் குழு தோற்கும் நிலையில் இருந்தபோது நம் விளையாட்டு வீரர்களான முகம்மது கைஃபும், ஜஹீர் கானும் அபாரமாக விளையாடி தோல்வியை விரட்டி வெற்றியடையச் செய்து நம் நாட்டிற்குப் பெருமை தேடித் தந்தார்கள். இந்த ஆட்டத்தின் போது அந்த இரு விளையாட்டு வீரர்களும் தம் மதத்தைப் பற்றி நினைத்தே இருந்திருக்க மாட்டார்கள்.

இக்கருத்தையே நம் இரு குடியரசுத் தலைவர்களும் கூறினார்கள் என்பதை நாம் மனதில் கொள்ள வேண்டும். நம் நாட்டில் வன்முறைக்கு இடமே இல்லை என்ற நிலைக்கு நாம் வந்திருக்கிறோம். எனவே யாவரும் அமைதியாக வாழ்ந்து பிறரது நலன்களைப் பேணி வருவோமாக!

---

ஆசிரியர் : விஸ்வம்
Visit us at : http://www.chandamama.org



**இந்திய மாவீரர்கள் புதிர்ப் போட்டியில் கலந்து கொண்டு அற்புதமான பரிசுகளை வெல்லுங்கள்**

# இந்திய மாவீரர்கள் - 12

**நமது தேசியப் போராட்டங்களில் சில தலைவர்களை இதில் காணலாம். நீங்கள் அவர்களை அறிவீர்களா?**

**முற்றிலும் சரியான விடைகள் கொண்ட மூன்று கூப்பன்களுக்கு சைக்கிள்கள் பரிசளிக்கப்படும்***



1 ஆங்கில அரசின் உத்தியோகங்களை உதறி எறியும்படி காங்கிரஸ்காரர்களிடம் கூறினேன். என்னை 'பஞ்சாப் சிங்கம்' என்பார்கள். நான் யார்?

---

2 நான் தமிழ் புரட்சிக் கவிஞன். என் கவிதைகளும் பாடல்களும் இந்தியத் தாயை 'சக்தி' எனக் கூறுகின்றன. நான் யார்?

---

3 'கேசரி' எனும் மராட்டி தினசரியின் ஆசிரியரான நான் ஆறாண்டுகள் பர்மாவின் மாண்டலேயில் சிறை வைக்கப்பட்டேன். நான் யார்?

---

4 இந்திய சோஷலிசக் குடியரசுப் படையைத் துவக்கிய நான் 1931ல் ராஜகுருவுடனும் சுகதேவுடனும் தூக்கில் போடப்பட்டேன். நான் யார்?

---

5 சத்தியாக்கிரகத்தை ஓர் அரசியல் ஆயுதமாகப் பயன்படுத்திய நான் யார்?

---

ஒவ்வொரு வினாவிற்கும் அதன் கீழுள்ள வெற்றிடத்தில் விடையைத் தெளிவாக எழுதவும். இந்த ஐவரில் உங்களுக்கு பிடித்தமான தேசியமாவீரர் யார் என்றும் அதற்கான காரணங்களை பத்து சொற்களில் எழுதவும். எனக்கு மிகவும் பிடித்த தேசிய மாவீரர் ....................................

..........................................................................

..........................................................................

போட்டியாளரின் பெயர்: ....................................

வயது: .................. வகுப்பு: ....................................

முகவரி: ..........................................................

..........................................................................

பின்கோடு: ...................... போன்: ..........................

போட்டியாளரின் கையொப்பம்: ................................

பெற்றோரின் கையொப்பம்: ....................................

இந்தப் பக்கத்தைக் கத்தரித்துக் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**இந்திய மாவீரர்கள் புதிர்ப்போட்டி - 12**
**சந்தமாமா இந்தியா லிமிடெட்**
நெ. 82. டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி
ஈக்காட்டுத்தாங்கல், சென்னை-600 097
அனுப்ப வேண்டிய கடைசித் தேதி அக்டோபர் 5, 2002

இப்பரிசுகளை உங்களுக்கு அளிப்பவர்கள்




நிபந்தனைகள்:

1. இப்போட்டி 8 முதல் 14 வயதிற்குட்பட்டவர்களுக்கு மட்டுமே.
2. *எல்லா மொழிப்பதிப்புகளின் கூப்பன்களிலிருந்தும் மூன்று பேர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். இச்சிறார்களுக்கு அவர்களுக்கு ஏற்ற அளவு சைக்கிள்கள் வழங்கப்படும். முற்றிலும் சரியான விடைகள் கொண்ட பல கூப்பன்கள் இருந்தால், 'எனக்கு மிகவும் பிடித்தமான மாவீரர்' என்ற தலைப்பில் எழுதப்பட்ட வாக்கியங்களில் சிறந்தனவாகத் தேர்ந்தெடுக்கப்படுபவைகளுக்குப் பரிசு அளிக்கப்படும்.
3. நடுவர்களின் தீர்ப்பே இறுதியானது.
4. இப்போட்டி தொடர்பாக எவ்விதக்கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்ளப்படமாட்டாது.
5. வெற்றிபெற்றவர்களுக்குத் தபால் வாயிலாக முடிவுகள் தெரிவிக்கப்படும்.

# வயதில் மிகவும் குறைந்தவர்!

முன்காலத்தில் ஜெயபுரம் என்ற நாட்டைச் சுற்றிலும் இருந்த நாடுகள் அந்நாட்டுடன் பகைமை கொண்டிருந்தன. எந்த நிமிடம் அவை தன் நாட்டைத் தாக்குமோ என்று ஜெயபுர மன்னன் பயந்து கொண்டிருந்தான். ஆனால் அவரது மதியூக முதலமைச்சர் மாணிக்கசேனர் சமாதான முறையில் அந்நாடுகளுடன் பேச்சுவார்த்தைகள் நடத்தி அவற்றை ஜெயபுரத்தின் நட்பு நாடுகளாக்கிவிட்டார். நாடும் முன்னேற்றம் அடைந்தது.

மாணிக்கசேனருக்குத் தொண்ணூறு வயதாகிவிட்டது. அதனால் அவர் ஜெயபுர மன்னனிடம், ''அரசே! இனியும் என்னால் ஆட்சிமுறைகளை கவனித்து வேலை செய்ய முடியாது. அதனால் பதவியிலிருந்து ஓய்வு பெற விரும்புகிறேன்,'' என்றார். மன்னனும் ''உங்கள் இஷ்டப்படியே செய்யுங்கள். ஆனால் நீங்கள் உங்கள் பதவிக்குத் தகுந்தவராய் ஒருவரைத் தேர்ந்தெடுங்கள். அவரையே முதலமைச்சராக நியமித்துவிடுகிறேன்,'' என்றான்.

மாணிக்கசேனரும், ''என்னைவிட வயதில் மிகவும் குறைந்தவராக இருப்பவரைத் தேர்ந்தெடுக்கிறேன்,'' என்று கூறி அப்போது அமைச்சர்களாக இருந்தவர்களில் ஒருவரையே தேர்ந்தெடுத்தார். அவர் தேர்ந்தெடுத்தவரின் வயது எண்பது. இது தொண்ணூறைவிட மிகக் குறைவுதானே!



## இந்தியாவில் அறிந்திராத இடங்கள்

# டைடாவில் 'ஜங்கிள் பெல்ஸ்'

ஆந்திரப் பிரதேசத்தில் விசாகப்பட்டணத்திலிருந்து 75 கி.மீ. தொலைவில் கிழக்குத் தொடர்ச்சி மலையில் உள்ளது தான் டைடா என்ற சிறிய கிராமம். ஆந்திரப் பிரதேச சுற்றுலா வளர்ச்சிக் கழகமும் அம்மாநில வனத்துறையும் இணைநது செயல்பட்டு 'ஜங்கிள் பெல்ஸ்' என்ற இயற்கை வளமான முகாம் ஒன்றை அமைத்துள்ளார்கள். இது சுற்றுலாவிற்கும் இயற்கை சுற்றுப்புறச் சூழலுக்கும் கல்வி புகட்டவும் இம்மாநிலத்தில் திட்டமிடப்பட்டு அமைக்கப்பட்டதாகும்.



இந்த 'ஜங்கிள் பெல்ஸ்' இயற்கை முகாம் காடுகளுள்ள 25 ஏக்கர் நிலப்பரப்பில் அமைக்கப்பட்டுள்ளது. இங்கு நீங்கள் தங்குவதற்கு கூடாரங்கள், மரக்குடில்கள் உள்ளன. சிற்றுண்டி சாலை, காபி கடை, இயற்கை நூலகம், உயர் கோபுர அமைப்புகள் என எல்லா நவீன வசதிகளும் உள்ளன.



இங்குள்ள மலைகள், காடுகள், குன்றுகள், கிராமங்களில் நீங்கள் சுற்றிவர வழிகாட்டிகள் உதவிக்கு இருக்கிறார்கள். இவர்கள் பலவிதப் பறவைகளைக் காட்டி விளக்கம் கூறுகிறார்கள். பறவைகளைப் பார்த்து லயித்துப் போகிறவர்களுக்கு இது சொர்க்கம். இங்கு 350 விதப் பறவைகளைக் காணலாம். நீங்கள் காட்டுவாசியாகவே ஆகிவிட விரும்பினால் உங்களுக்கு பறவைகளை இனம் காணவும், அவற்றின் அடிச்சுவடுகள், ஒலி, அவை மறைந் திருக்கும் இடங்கள் போன்றவற்றில் பயிற்சி அளிக்கவும் பலர் உள்ளனர். புலியைக் கூட இங்கு பார்க்கும் அதிர்ஷ்டமும் உங்களுக்குக் கிடைக்கலாம். வனவிலங்குகளான புள்ளி மான்கள், குரைக்கும் மான்கள், கரடி, சிறுத்தை போன்றவற்றையும் இங்கு காண முடியும்.

அழகிய குன்றுகளும் மலைகளும் இங்கு உங்கள் மனதைக் கவர்பவை. நீங்கள் இங்கு நடக்கவும் ஏறவும் பெரிதும் விரும்புவீர்கள்.

**எப்படி இங்கு செல்வது :** விசாக பட்டணத்திலிருந்து டைடாவிற்கு வாடகைக் காரில் செல்லலாம். ஆனால் ரயிலில் போவதே ஏற்றது. விசாகப் பட்டணத்திலிருந்து டைடாவுக்குச் செல்லும் ரயில் பாதை மெய்சிலிர்க்க வைப்பதாய் அழகிய பசுமையான பள்ளத்தாக்குகளையும் குன்றுகளையும் நீர்வீழ்ச்சிகளையும் பல நுழைவுக் குகைகளையும் கொண்டிருக்கும். நீங்கள் ஏபிடிடிசி சுற்றுலாத் திட்டத்தில் கீழ் ஹை-டெக் கோச்களிலும் செல்லலாம்.



# மர்மக் குளம்

## 7

(மந்திரி குளக்கரையில் முகாமிட்டிருக்கிறார் என்று குதிரை வீரர்கள் கூறத் தெரிந்து கொண்ட ஜெயசீலன் முதலை மனிதனை அந்த இடத்திற்குக் கொண்டு செல்லத் தீர்மானித்தான். அவனும் சித்தசாதகனும் முதலை மனிதனோடு அவனது யானை மீதே அமர்ந்து சென்றார்கள். தான் இறக்கப் போவது உறுதி எனத் தெரிந்து கொண்ட முதலை மனிதன் யானையைத் தண்ணீர் குடிக்க வைக்க அதனை ஏரிக்குள் போகச் செய்தான். யானை ஏரி நீருக்குள் மூழ்கவே, அதன் மீதிருந்த ஜெயசீலனும் சித்தசாதகனும் முதலை மனிதனும் ஏரிக்குள் மூழ்கலானார்கள். அப்போது –)

முதலை மனிதனோடு ஏரி நீரில் விழுந்த ஜெயசீலனும் சித்தசாதகனும் நீந்தியவாறே இருந்தார்கள். ஜெயசீலன் அப்போது நீரில் மூழ்கி முதலை மனிதனும் அவனது யானையும் போகும் திசையிலேயே பின் தொடரலானான். அவன் முதலை மனிதனை அணுகியதும் அவன் முதுகில் ஓர் அடி கொடுத்து, ''அடே, முதலைத்தோலா! எங்களை இந்த ஏரியின் நீரில் மூழ்கடித்து சாகடிக்கப் பார்க்கிறாயா?'' என்று கேட்டான்.

முதலை மனிதன் பலமாகச் சிரித்து, ''ஜெயசீலா! நாம் இருப்பது நீரின் நடுவே. சண்டை போடுவதானால் நீருக்குள்ளும் போட வேண்டி வரும். அங்கு எதையும் பார்க்க முடியாது. கேட்க முடியாது. மூச்சு



கூட விட முடியாது. இது தெரியுமா?'' என்று கேட்டான்.

சித்தசாதகனும், ''ஜெயசீலா! இவன் சொல்வது சரியே. இவனது யானை அதோ போகிறது. இவனைத் தாக்க ஒரு வேளை மந்திர சக்தி வேண்டியிருக்கலாம். இதற்காக மகா காலனை நான் வேண்டிக் கொள்கிறேன்,'' என்றான்.

இதற்குள் ஒரு பெரிய குகையின் வாயிலிலிருந்து நீர் 'குபு குபு'வென்று தண்ணீர் வந்து ஏரிக்குள் விழுந்து கொண்டிருப்பதை ஜெயசீலனும் சித்தசாதகனும் கவனித்தார்கள்.

முதலை மனிதன் ஜெயசீலனிடம், ''என்ன பேச்சு மூச்சு இல்லாமல் வருகிறீர்கள்? ஏன் மூச்சு விடத் திணறுகிறீர்களா? நீரில் முங்கி மேலே வருவது என்றால் இப்படித் தான் சிரமப்பட வேண்டும்,'' என்றான்.

ஜெயசீலனும், ''ஓஹோ! எங்களைவிட நீரில் அதிக நேரம் மூழ்கி இருந்ததால் உனக்கு அபூர்வ சக்தி இருக்கிறது என்று தெரிவிக்கிறாயா?'' என்று கேட்டான். முதலை மனிதனும், ''அதில் சந்தேகம் என்ன? எனக்கு மட்டும் அல்ல, என் யானைக்கும் அபூர்வ சக்தி உள்ளது. அதனால் நீ என்னைத் தாக்க வாளை உருவாதே!'' எனச் சிரித்துக் கொண்டே கூறினான்.

ஜெயசீலனும், ''சும்மா ஜம்பம் அடிக்காதே! பேசாமல் உன் யானையுடன் ஓடித் தொலை! அப்படி ஓடாவிட்டால் என் வாள் உன் தலையைத் துண்டித்துவிடும்,'' என்று எச்சரித்தான். சித்தசாதகனும், ''முதலைத் தோலா! ஜெயசீலனின் வாள் மட்டுமல்ல, என் ஈட்டியும் உன்னைப் பதம் பார்த்துவிடும்,'' என்று கூறியவாறே தன் ஈட்டியை உயர்த்தினான்.

அதைக் கண்டு முதலை மனிதன் பலமாகச் சிரித்து, ''ஓஹோ! நீங்கள் இருவருமா என் தலையை வெட்டி எறியப் போகிறீர்கள்? என்னை மட்டும் நீங்கள் ஒருவேளை கொன்றுவிட்டால் நீங்கள் இருவரும் இதே இடத்தில் துடிதுடித்து இறந்து போய்விடுவீர்கள்,'' என்றான்.

அதைக் கேட்டு ஜெயசீலனும் சித்தசாதகனும் பயந்துவிடவில்லை. இச்சமயத்தில் ஒரு பெரிய முதலை ஒரு மீனைத் துரத்திப் பிடிக்க முயன்று கொண்டிருந்தது. முதலை மனிதன் அந்த முதலையின் வாலைப் பிடித்துத் தூக்கி தூரத்தில் எறிந்துவிட்டு,

''ஜெயசீலா! நீங்களும் இங்கு இறக்கப் போவதில்லை. நானும் உங்களுக்கு அகப்படப் போவதில்லை. நான் சற்று நேரத்தில் கரை சேர்ந்து என் யானையுடன் போய்விடுவேன். நீங்களும் உங்கள் வழியே போய் விடுங்கள்,'' என்றான்.

அப்போது ஜெயசீலன் முதலை மனிதனிடம், ''இதுதான் மர்மக்குளம் எனப்படுவதா?'' என்று கேட்டான். முதலை மனிதன் தன் உடலை ஒரு முறைப் பார்த்துக் கொண்டு, ''இந்தக் குளத்து நீரில் இவ்வளவு நேரம் இருந்ததால் கத்தியினாலும் அம்பினாலும் ஏற்பட்ட காயங்களின் வலி போய்விட்டது. இது மர்மக்குள மகேஸ்வரனின் அருளால் தான். ஆனால் மர்மக்குளம் எனப்படுவது இது இல்லை. அதைப் பார்த்த எந்த மனிதனும் உயிருடன் திரும்பி வந்ததே இல்லை,'' என்றான்.

அதன்பின் முதலை மனிதன் வேகமாக நீந்தித் தன் யானையை அடைந்து விட்டான். அவனைப் பிடிக்க முடியாது எனக் கண்ட ஜெயசீலனும் சித்தசாதகனும் அங்கு மிதந்து வந்த ஒரு பெரிய மரக்கிளையைப் பற்றி அதில் ஏறி ஆளுக்கு ஒரு முனையில் உட்கார்ந்து கொண்டார்கள்.

அப்போது தான் ஒரு புலியும் அந்தக் கிளையில் இருப்பதை அவர்கள் பார்த்தார்கள். அந்த மரக்கிளை மிதந்து கொண்டே போய் குகையிலிருந்து வந்த நீரோட்ட வேகத்தில் மிக வேகமாய்ப் போய் இரு பாறைகளுக்கு மத்தியில் சிக்கி இரண்டாக



உடைந்து தனித்தனியாகச் சென்றது. கிளையின் ஒரு துண்டில் ஜெயசீலனும் மற்ற துண்டில் சித்தசாதகனும் புலியும் இருந்தனர்.

ஜெயசீலன் இருந்த மரக்கிளைத் துண்டு கரை ஓரமாகப் போய் நின்றது. நல்ல வேளையாக அந்தக் கிளை நேராகப் போகவில்லை. போயிருந்தால் அங்குள்ள நீர்வீழ்ச்சியை அடைந்து ஜெயசீலனோடு உயரமான இடத்திலிருந்து ஆழமான பள்ளத்துள் விழுந்திருக்கும். கரை ஓரமாகப் போய்ச் சேர்ந்த ஜெயசீலன் எழுந்து நின்று சுற்றிலும் பார்த்தான்.

தன்னோடு வந்த சித்தசாதகன் என்ன ஆனான் என்று தெரியவில்லை. அருகில் கரை ஓரமாக அவனும் தன்னைப் போல ஒதுங்கி இருக்கலாம் என்று எண்ணி அவன்



'சித்தசாதகா!' என்று உரக்கக் கூவிப் பார்த்தான்.

பதில் எதுவும் வராததால் அவனுக்கு என்ன ஆபத்தோ என்று எண்ணி ஜெயசீலன் மனம் கலங்கினான். பிறகு ஒருவாறு மனதைத் தேற்றிக் கொண்டு கரை மீது நடந்து கொண்டே போனான். ஓர் இடத்தில் புலியின் உறுமல் கேட்டு திடுக்கிட்டுத் திகைத்து நின்றான். அப்போது புலியும் சித்தசாதகனும் மரக் கிளையில் இருந்தது அவன் நினைவிற்கு வந்தது.

ஒருவேளை புலி சித்தசாதகனைக் கொன்றுவிட்டதோ என்று எண்ணி ஜெயசீலன் வாளை உருவிக் கையில் பிடித்தவாறே உறுமல் சத்தம் வந்த இடத்தை நோக்கிச் சென்றான்.

ஓரிடத்தில் கரையில் சித்தசாதகன் ஆடாமல் அசையாமல் படுத்துக் கிடப்பதை அவன் கண்டான். புலி அவனை நோக்கி வந்து கொண்டிருந்தது. அதன் இரண்டு கால்கள் முறிந்து போயிருந்ததால் அதனால் வேகமாகச் செயல்பட முடியாமல் போயிற்று. அது மேலும் உறுமிக் கொண்டே சித்தசாதகனைத் தாக்க வந்து கொண்டிருந்தது.

இதற்குள் கட்டை போல் கிடந்த சித்தசாதகன் நினைவு பெற்றுக் கண்விழித்ததும் புலி தன்னைத் தாக்க வருவதைக் கண்டு, ''ஐயோ! காப்பாற்றுங்கள்!'' என்று அலறினான்.

இதற்குள் புலி நொண்டிக் கொண்டு போவதைக் கண்டு ஜெயசீலன் ஓடி அதன் பின்னங்கால்களைப் பற்றி உயரத் தூக்கி ஒரு புதருக்குள் எறிந் தான். ஆபத்து விலகியது கண்டு சித்தசாதகன் எழுந்து சற்றுத் தொலைவில் கிடந்த தன் ஈட்டியை எடுத்துக் கொண்டு ஜெயசீலனின் முன் வந்து நின்றான். இதற்குள் ஜெயசீலன் விரைந்து போய் தன் வாளால் புலியின் தலையை வெட்டி எறிந்தான்.

அவன் சித்தசாதகனைப் பார்த்து, ''ஆகா! மறுபடியும் உன்னைக் கண்டு மகிழ்ச்சி அடைந்தேன். முதலை மனிதன் இனி நம் கையை விட்டுப் போனது போலத்தான்,'' என்றான்.

சித்தசாதகனும், ''இனி பழைய சம்பவங்களைப் பற்றிப் பேசுவதால் ஒரு பயனும் இராது. முதலில் நாம் இருக்கும் இப்பகுதியைப் பற்றி அறிந்து கொள்ள வேண்டும்,'' என்றான்.

அப்போது யாரோ ஒருவன் அல றுவதையும், காட்டாடு ஒன்று உறு முவதையும் அவர்கள் கேட்டார்கள். சித்தசாதகனும், ''யாரோ ஒருவன் பெரும் ஆபத்தில் அகப்பட்டுக் கொண்டிருக்கிறான் போலிருக் கிறது,'' என்றான்.

ஜெயசீலனும், ''சித்தசாதகா! வா, நாம் போய் விஷயம் என்ன என்று பார்க்கலாம்!'' என்று கூறி அவனைக் கூட்டிக் கொண்டு சத்தம் வந்த இடத்தை நோக்கி ஓடினான்.

இருவரும் அங்கு போனதும் தாம் கண்ட காட்சியைக் கண்டு திகைத்து நின்றார்கள். ஏனெனில் அங்கு கரை ஓரத்தில் இருந்த பெரிய மரத்தில் மலைச்சாதிக் குள்ளன் ஒருவனும், காட்டாடு ஒன்றும் தொங்கிக் கொண்டிருந்தது தான் அதற்குக் காரணம்.

சித்தசாதகனும், ''இது ஏதோ மாய மந்திர வித்தை போல் இருக்கிறதே!'' என்று கூறித் தன் ஈட்டியுடன் குள்ளன் தொங்கும் கிளையை நோக்கி ஓடினான்.

அப்போது அந்த மரத்தின் மற் றொரு கிளை தாழ்ந்து அவனது தோளைத் தட்டியது. அப்போது சித்தசாதகன், ''ஜெயசீலா! இந்த மரத் திற்கு ஏதோ கொடிய சக்தி உள்ளது. அதனால் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும்,'' என்றான்.

அதைக் கேட்ட ஜெயசீலன் ஓடி வந்தான். தாழ்ந்து வந்து சித்தசாத கனை அடித்த மரக்கிளையை தன் வாளால் ஒரே வெட்டில் வெட்டி



னான். அதே கிளையில் தொங்கிக் கொண்டிருந்த காட்டாடும் குள் ளனும் ஆற்று நீரில் 'பொத்'தென்று விழுந்தார்கள்.

நீரிலிருந்து துள்ளிக் குதித்து ஓடிவந்த குள்ளன் ஜெயசீலனிட மும் சித்தசாதகனிடமும், ''ஐயா! இது மனிதர்களைப் பற்றி விழுங் கும் ராட்சஸ மரம். இதன் பிடி யிலிருந்து சேனாதிபதியான என் னைக் காப்பாற்றினீர்கள். அதற்கு என் நன்றி. இதைக் கேட்டு எம் கூட்ட ராணியும் தங்களுக்குப் பரிசுளை அளிப்பார்,'' என்றான்.

அவன் இவ்வாறு கூறிக் கொண் டிருக்கும்போதே அங்குள்ள மரங் களின் இடையில் இருந்து பலத்த ஆரவாரம் ஏற்பட்டது. இரண்டு கொழுத்த செம்மறி ஆடுகள் இழுத்து வந்த தேரில் மயிலிறகுக் கிரீடம்



அணிந்து பெண் ஒருத்தி அமர்ந்திருந்தாள். அவள் பின்னால் அதே போன்ற செம்மறி ஆடுகள் மீதேறிப் பல ஆட்கள் வந்து கொண்டிருந்தார்கள்.

அப்போது தன்னை சேனாதிபதி எனக் கூறிக் கொண்ட குள்ளன் ஓடிப் போய் தேரில் இருந்த பெண்மணியை வணங்கி, ''அரசியாரே! இதோ நிற்கும் இரு மாவீரர்கள் என்னை ராட்சஸ மரத்தின் பிடியிலிருந்து காப்பாற்றினார்கள்,'' என்றான்.

குள்ளர் கூட்டத்தின் அரசியும், ''அப்படியா! வீரர்களே! நேற்று நீங்கள் என் கனவில் தோன்றினீர்களே! அப்போது என் எதிரிகளை ஒழிப்பதாகக் கூட வாக்கு அளித்தீர்கள்!'' என்றாள்.

அப்போது ஜெயசீலன் ''உங்களுக்கு எதிரிகளா? ஆச்சரியம் தான். உங்களுக்கு எங்களால் முடிந்த உதவிகளைச் செய்கிறோம்,'' என்றான்.

அப்போது அங்கிருந்த ஒரு குன்றின் மீதிருந்து பயங்கரச் சத்தம் கேட்டது. உடனே எல்லோரும் அது வந்த திசையில் பார்த்தார்கள்.

பனிரெண்டு அடி உயரமுள்ள ஒரு பயங்கர உருவம் குன்றின் உச்சி மீது நின்று கொண்டிருந்தது. அதன் கையில் ஒரு பெரிய பாறாங்கல் இருந்தது. அதன் இடுப்பில் கட்டியிருக்கும் இரும்புச் சங்கிலியைப் பிடித்துக் கொண்டு ஒரு மனிதன் நின்று கொண்டிருந்தான்.

அந்த பயங்கர உருவத்தைக் கண்டதும் குள்ளர் கூட்ட அரசியும், மற்ற குள்ளர்களும் நடுநடுங்கிப் போனார்கள். அந்த பயங்கர உருவத்தைப் பிடித்துக் கொண்டிருந்த மனிதன் தன் வாளால் அதன் தலை

யில் ஒரு தட்டு தட்டினான். அந்த பயங்கர உருவம் பாறாங்கல்லைத் தூக்கிக் கொண்டு அப்படியும் இப் படியுமாக அசைந்தது.

அதைக் கண்ட ஜெயசீலன், "சித்தா! அந்தப் பயங்கர உருவம் அந்த மனிதன் சொல்கிறபடி எல் லாம் செய்வதைப் பார்! அரசி கூறிய எதிரிகள் இவர்கள் தானா?" எனக் கூறினான்.

அப்போது தேரிலிருந்து குள்ளர் கூட்ட அரசி இறங்கி வந்து, "வீரர் களே! என் எதிரிகள் எம் சாதியைச் சேர்ந்த மற்றொரு பிறவினரே. அவர்களுக்கும் எங்களுக்கும் இன் றல்ல, நேற்றல்ல, நீண்ட காலமாகப் பகைமை இருந்து வருகிறது. அவர் களைவிடப் பிறப்பில் எங்கள் சாதி யினர் மட்டமானவர்களாம். அவர்கள் தம்மை உயர்குடிப் பிறப்பினர் எனக் கூறிக்கொண்டு எங்களை ஒழிக்கப் பார்க்கிறார்கள். இதுவரை என்னென் னவோ செய்து பார்த்தார்கள். அவர் களால் எங்கள் சாதியினரை அழிக்க முடியவில்லை. இப்போது ஒரு விசித்திர முறையில் எங்களை அழிக்கப் பார்க்கிறார்கள்," என்றாள்.

ஜெயசீலனும், "அந்த பயங்கர உருவம் ஒரு மனிதக் குரங்கு போலத் தென்படுகிறதே!" என்று கூற, அரசி யும், "ஆம். அது மனிதக் குரங்கு தான். அதன் பின்னால் இருக்கும் மனிதன் சொல்கிறபடி எல்லாம் அது செய்கிறது. அதைப் பயன்படுத்தித் தான் எங்களைத் தாக்கிக் கொண்டிருக் கிறார்கள். எம் எதிரிகள் இப்படிப் பட்ட தாக்குதலைக் கடந்த மூன்று நாட்களாகச் செய்து வருகிறார்கள். இப்போது நீங்களே நேரில் பாருங் கள், தாக்குதல் எப்படி நடக்கிறது என்று. அந்த மனிதன் பாறாங்கல்லை எம் மீது எறியும்படி அந்த மனிதக் குரங்கிடம் கூறுகிறான். அதுவும் அவ்வாறே செய்கிறது!" என்றாள்.

இப்படி அவள் கூறிக் கொண் டிருக்கும்போதே மனிதக் குரங்கு குள்ளர் கூட்ட அரசியும் மற்ற குள் ளர்களும் நின்ற இடத்தை நோக்கிப் பாறாங்கல்லை எறிந்தது.

*(தொடரும்)*



# மணக்க முடியாத காரணம்!

ஹோட்ஜா நசீருத்தீன் தன் நண்பனுடன் மது அருந்திக் கொண்டிருக்கையில் இன்னொரு நண்பன் உற்சாகத்துடன், ''அடுத்த வாரம் எனக்குத் திருமணம். நீ அதற்கு அவசியம் வர வேண்டும்,'' என்றான். ஹோட்ஜாவும் கண்டிப்பாக வருவதாகக் கூறி, அவனுக்கும் குடிக்க மதுவைக் கொடுத்தான். அப்போது அந்த நண்பன் அவனிடம், ''ஆமாம். நீ ஏன் மணம் புரிந்து கொள்ளாமல் இருக்கிறாய்?'' என்று கேட்டான்.

ஹோட்ஜாவும், ''நான் பல ஆண்டுகளுக்கு முன் திருமணம் செய்து கொள்ள முயன்றேன். எனக்கு ஏற்ற பெண் கிடைப்பாளா என்று ஊர்ஊராகத் திரிந்த போது, ஒரு சிறு கிராமத்தில் அழகிய பெண் ஒருத்தியைப் பார்த்தேன். அவள் புத்திசாலி. நல்லவளும் கூட. ஆனால் உலக ஞானம் முற்றிலும் இல்லாதவள். அதனால் அவள் என் மனைவியாகத் தகுதி பெற்றவளல்ல என்றெண்ணி, அங்கிருந்து ஒரு நகரத்திற்கு வந்தேன். அங்கு ஒரு பெண்ணைக் கண்டேன். அவளுக்கு அழகு, நற்குணங்கள், உலக ஞானம் இருந்தன. அவளே நான் மணக்கத் தக்கவள் என்று தீர்மானித்துக் கொண்டேன்,'' என்று கூறி நிறுத்தினான்.

அப்போது அவனது நண்பன், ''அப்படியானால் அவளை நீ ஏன் மணந்து கொள்ளவில்லை?'' என்று கேட்டான்.

ஹோட்ஜாவும், ''அவளுக்கு நம் மொழி தெரியாது. அவளிடம் பேச முடியாதே என எண்ணி அவளை மணக்கும் எண்ணத்தைக் கைவிட்டுவிட்டு, அங்கிருந்து எகிப்திற்குப் போனேன். அங்கு நான் பார்த்த பெண்ணிற்கு அழகு, நற்குணங்கள், உலக ஞானம், கடவுள் பக்தி என்று எல்லாமே இருந்தன. அவள் நமது மொழியிலும் நன்கு பேசும் திறன் பெற்றிருந்தாள். அதனால் அவளே எனக்கு மனைவியாக ஏற்றவள் என்று முடிவு செய்தேன்,'' எனக் கூறி நிறுத்தினான்.

உடனே நண்பன், ''நீ அவளை மணந்து கொண்டாயா?'' என்று கேட்டான்.

ஹோட்ஜாவும் ''எனக்கு என்னமோ அவளைப் பிடித்திருந்தது. ஆனால் அவளுக்குத் தான் என்னைப் பிடிக்கவில்லையே. என்ன செய்வேன்?'' என்று கூறிப் பெருமூச்சு விட்டான்.



நவீன வேதாளக் கதை

# முற்றும் துறந்தவர்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மறுபடியும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து, ''மன்னனே! இந்த பயங்கர நள்ளிரவில் நீ எதை மனதில் வைத்துக் கொண்டு. விடாப்பிடியாகச் செயல்படுகிறாய்? சில சமயத்தில் ஒருவனின் மனஉறுதி தளர்ந்து, தான் நினைத்ததை செய்ய முடியாமலேயே போய்விடுவதும் உண்டு. வழியில் உனக்குச் சிரமம் தெரியாதிருக்க பராங்குசம் என்ற யோகியின்



கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்,'' என்று கூறிக் கதையைச் சொல்ல ஆரம்பித்தது.

பராங்குசன் சுவேதபுரி மன்னனின் புரோகிதரின் ஒரே மகன். அவனும் அரசகுமாரன் சுவேதகீர்த்தியும் சம வயதினர். எனவே அவர்களது ஆரம்பக் கல்வி ஒரே ஆசிரியரிடம் நடந்த போது இருவரும் நெருங்கிய நண்பர்களாகிவிட்டார்கள். அதன்பின் மன்னன் தன் மகனைப் போர்க் கலைகளில் பயிற்சி பெற விந்திய மலைச்சாரலில் உள்ள சிவசந்திரரின் குருகுலத்திற்கு அனுப்பிவிட்டான். அதனால் நண்பர்கள் இருவரும் பிரிந்து போக வேண்டியதாயிற்று.

பராங்குசனுக்குச் சிறு வயதில் இருந்தே உலக வாழ்வில் பிடிப்பு ஏற்படவில்லை. அவனது நண்பனும் பிரிந்து போனதால் வெறுப்புற்று வீட்டை விட்டு வெளியேறி அருகில் உள்ள ஒரு காட்டிற்குச் சென்று கடும் தவம் புரியலானான். முதலில் காய், கனி, கிழங்குகளைப் புசித்து வந்த அவன் பிறகு எதுவும் உண்ணாமலும், நீர் கூட அருந்தாமலும் கடும் தவம் புரியலானான். அவனுக்குப் பல அரிய சக்திகளும் கிடைத்தன. ஆயினும் அவன் அவற்றைப் பொருட்படுத்தாமல் உன்னத நிலையான மோட்சத்தை அடைவதையே குறிக்கோளாகக் கொண்டு கடும் தவம் புரிந்து கொண்டே இருந்தான்.

பராங்குசனின் கடும் தவத்தைக் கண்டு தேவேந்திரன் தன் பதவி போய் விடுமோ என்று பயந்து அவனது தவத்தைக் கலைக்க திலோத்தமை என்ற அப்சரப் பெண்ணை அனுப்பினான். அதனால் பலன் எதுவும் இல்லாது போகவே தேவேந்திரன் ஒரு யோகியின் வேடத்தில் வந்து சுவேதபுரியின் மன்னனைக் கண்டு, ''மன்னா! உன் மகன் சக்கரவர்த்தியாக ஆக வேண்டும் என்று விரும்புகிறாயா?'' என்று கேட்டான். மன்னனும் 'ஆம்' எனவே, யோகியும் ''அப்படியானால் நீ சர்வ ஜீவ யாகத்தைச் செய்ய வேண்டும். உலகிலுள்ள மிருகங்கள், பறவைகள் ஆகியவற்றில் ஒவ்வொன்றைக் கொண்டு வந்து வைத்துக் கொண்டு அவற்றை அந்த யாகத்தில் பலியிட வேண்டும். இந்த யாகத்தைச் செய்பவர் கடும் தவம் செய்து கொண்டு நீர் கூட

அருந்தாமல் இருப்பவராக இருக்க வேண்டும்,'' என்றார்.

மன்னனும், ''சுவாமி! இந்த யாகத்திற்கான ஏற்பாடுகளைச் செய்கிறேன். நீங்கள் கூறியபடி கடும் தவம்செய்து கொண்டிருப்பவரைக் கொண்டே இந்த யாகத்தைச் செய்து முடிக்கிறேன்,'' என்றான். யோகியும், ''அத்தகைய முனிவர் கிடைப்பது மிக அரிது. எனக்குத் தெரிந்து இத் தலைநகருக்கு அருகே உள்ள காட்டில் பராங்குசர் என்பவர் நீர் கூட அருந்தாமல் ஒரு வருட காலமாகத் தவம் செய்து கொண்டிருக்கிறார். அவரை அழைத்து வந்து இந்த யாகத்தைச் செய். அதற்கு முன் மிருகங்களிலும் பறவைகளிலும் ரகத்திற்கு ஒன்றாகச் சேர்த்து வைத்துக் கொள். யாகம் முடிந்ததும் உன் மகன் சக்கரவர்த்தியாகிவிடுவான்,'' என்று கூறிவிட்டுச் சென்றார்.

மன்னனும் மிருகங்களிலும் பறவைகளிலும் ரகத்திற்கு ஒன்றாகப் பிடித்துவரச் செய்து அவற்றை எல்லாம் ஓரிடத்தில் அடைத்து வந்தான். பிறகு அவன் தன் அமைச்சரிடம், ''நீங்கள் காட்டிற்குப் போய் யோகி பராங்குசரைத் தேடிக் கண்டுபிடித்து அழைத்து வாருங்கள்,'' என்றான். அமைச்சரும் ஒரு வேடனின் உதவியால் பராங்குசரைக் கண்டுபிடித்து விட்டார்.

அவர் பராங்குசரை வணங்கி, ''சுவாமி! எம் மன்னர் நாட்டின் நலனுக்காக சர்வஜீவ யாகம் செய்யப் போகிறார். அதைத் தாங்கள் நடத்தி



வைக்க வேண்டும். அதனால் தயவு செய்து என்னுடன் தலைநகருக்கு வாருங்கள்!'' என்று வேண்டினார்.

பராங்குசர் பதில் எதுவும் கூறாமல் இருக்கவே, அமைச்சரும், ''மகாத்மா! தாங்கள் எதைக் கேட்டாலும் எம் மன்னர் கொடுக்கத் தயாராக இருக்கிறார். வீடு, நிலம், பணம் என்று எதையும் எந்த அளவில் கேட்டாலும் அவை தங்களுக்குக் கிடைக்கும். மேலும் வசதிகளை விரும்பினாலும் அவற்றையும் எம் மன்னர் அளிப்பார். ஏதாவது உயர் பதவியைத் தாங்கள் விரும்பினாலும் அதையும் அவர் அளிப்பார். எனவே தாங்கள் தலைநகருக்கு வந்து அந்த யாகத்தை நடத்திக் கொடுக்க வேண்டும்,'' என்று வேண்டினார்.

ஆனால் பராங்குசரோ, ''இந்த



யாகத்தை நான் நடத்திக் கொடுக்க முடியாது. யாகம் என்ற பெயரில் எண்ணற்ற ஜீவராசிகளைப் பலியிட ஒருபோதும் நான் இசையமாட்டேன்,'' என்றார். அமைச்சரோ, ''மன்னர் தாங்கள் எதைக் கேட்டாலும் கொடுக்க தயாராக இருக்கிறார். பட்டம், பதவி, பணம், பலவித வசதிகள் என்றெல்லாம் தங்களுக்குக் கிடைக்கும். சற்றே யோசித்துப் பாருங்கள்!'' என்று குழைந்தார்.

ஆனால் பராங்குசரோ, ''இதை எல்லாம் சாதாரண மனிதனிடம் கூறினால் அவன் அவற்றிற்கு ஆசைப் படுவான். ஆனால் எனக்கு இகலோக வாழ்க்கையில் சற்றும் விருப்பமே இல்லை. நான் தவம் செய்து மோட்சத்தை அடையவே விரும்புகிறேன். அதனால் நான் இந்தக் காட்டை விட்டு எங்கும் வரமாட்டேன்,'' என்று உறுதியாகக் கூறினார். இதனால் அமைச்சர் எதுவும் கூற முடியாமல் தலைநகருக்குத் திரும்பி வந்தார்.

அமைச்சர் மன்னனைக் கண்டு பராங்குசர் கூறியதைத் தெரிவிக்கவே, மன்னனும் ''அப்படியா! நான் என் மகளையே அவருக்கும் மணம் செய்து வைத்து எனது நாட்டையே அவருக்குக் கொடுப்பதாகத் தெரிவியுங்கள்,'' என்று கூறி மீண்டும் அமைச்சரைப் பராங்குசரை அழைத்து வரக் காட்டிற்கு அனுப்பினான்.

அதைக் கேட்ட அரசகுமாரி தான் ஒரு சன்னியாசியையா மணப்பது என்று எண்ணிக் கவலைப்படலானாள். அப்போது மன்னன், ''கவலைப்படாதே! இது சும்மா ஒரு பேச்சுக்குத் தான். முதலில் அவரை அழைத்து வந்து யாகத்தை முடித்துக் கொள்ளலாம். பிறகு திருமணம் என்ற பேச்சு வரும்போது கையை விரித்து அவரை ஏமாற்றிவிடலாம்,'' என்றான்.

தன் தந்தை இவ்விதமாய் முனிவரை ஏமாற்ற நினைப்பதை விரும்பாதபோதிலும் அவரது சொற்படி அமைச்சருடன் காட்டிற்குச் சென்றாள். அமைச்சரும் பராங்குசரிடம், ''மகாத்மாவே! எம் மன்னர் தம் மகளையே தங்களுக்கு மணம் செய்து வைத்து நாட்டையும் கொடுப்பதாகத் தெரிவிக்கிறார். தயவுசெய்து தாங்கள் தலைநகருக்கு வந்து சர்வ

ஜீவ யாகத்தை நடத்திக் கொடுத்து விட்டு, இவளை மணந்துகொண்டு நாட்டின் மன்னராகி சுகமாகக் காலம் கழியுங்கள்,'' என்றான்.

பராங்குசரும் அரசகுமாரியைப் பார்த்து மகிழ்ந்து போய் அமைச்சரும் அரசகுமாரியும் வந்த ரதத்தில் ஏறி அமர்ந்து தலைநகரை அடைந்தார். ஒரு பரந்த மைதானத்தில் யாக சாலை அமைக்கப்பட்டது. அதனருகே பலி யிடப்பட வேண்டிய மிருகங்களும் பறவைகளும் கொண்டு வரப்பட் டன. பராங்குசர் வெட்டுவாளுடன் பலிபீடத்தருகே வந்தார்.

அங்கு பலியிடுவதற்கு ஒரு யானை நிறுத்தப்பட்டிருந்தது. அதை பலியிட பராங்குசர் வெட்டுவாளை உயர்த்தியபோது யானை பயங்கர மாகப் பிளிறியது. அதைக் கேட்டு மற்ற மிருகங்களும் பறவைகளும் பெருத்த கூச்சல் போட்டன. பராங் குசர் சுற்றிலும் பார்த்துவிட்டுத் தன் கையிலிருந்த வெட்டுவாளால் தன் தலையையே வெட்டவே, அது யாகத் தீயில் போய் விழுந்தது.

வேதாளம் இக்கதையைக் கூறி, ''மன்னா! பராங்குசர் அரசகுமாரியை மணந்து நாட்டின் மன்னனாகிவிட ஆசைப்பட்டுத் தானே யாகம் செய்ய வந்தார்? ஆனால் யானையைப் பலி யிடாமல் அவர் தன்னையே ஏன் பலியிட்டுக் கொண்டார். இக்கேள் விக்குச் சரியான விடை தெரிந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்குநூறாகிவிடும்,'' என்றது.

விக்கிரமனும், ''பராங்குசர் உலக வாழ்க்கை மீது விரக்தி கொண்டவர். அவர் அரசகுமாரியைக் கண்டு மயங்கி அவளை மணந்து கொள்ளும் நோக்கத்தோடு வரவில்லை. பல மிருகங்களையும் பட்சிகளையும் காக் கத் தனக்கு ஒரு வாய்ப்பு கிடைத்ததே என மகிழ்ந்து யாக சாலைக்கு வந்து தன்னையே பலி கொடுத்துக் கொண் டார். இதனால் மன்னன் மனம் மாறு வான் என்றே அவர் எண்ணினார்,'' என்றான்.

விக்கிரமனின் சரியான இப்பதி லால் அவனது மௌனம் கலைய, அவன் சுமந்து வந்த உடலோடு வேதா ளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தின் ஏறிக் கொண்டது.



## இந்தியப் புராதனக் கதைகள் - 5

# கடவுளுடன் சூதாடியவர்



அந்த ஊரில் சூதாட்டத்தில் சோம தத்தனை வெல்பவர் யாருமில்லை. அநாதையான அவன் சூதாட்டத்தில் வென்ற பணத்தை எல்லாம் ஏழை எளியவர்களுக்குக் கொடுத்துவிடு வான். அவனுக்கு அந்த ஊருக்கு வெளியே ஒரு குகையில் வசித்து வந்த சாதுவிடம் பக்தி அதிகம். அவ்வப் போது அவருக்குப் பழங்களை அவன் கொண்டு போய்க் கொடுத்து வந்தான். அவரும் அவனுக்கு ஆசிகள் கூறி, ''அப்பனே! நீ கடவுளை நம்பி வழி படு. அவர் எப்போதும் உனக்குத் துணையாக இருப்பார்,'' எனக் கூறி வந்தார்.

சோமதத்தனுக்கு வருமானம் சூதாட்டத்தில் தான். மழைக்காலத் தில் ஒருநாள் அவன் கையில் ஒரு காசு கூட இருக்கவில்லை. அதனால் அன்று நகரில் சூதாட்டம் நடக்கும் இடங்களுக்கு எல்லாம் போனான். ஆனால் அவனுடன் சூதாட அங்கி ருந்தவர்கள் மறுத்தனர். சோமதத் தனுக்கோ பசி வயிற்றைக் கிள்ளியது. கடவுளே கதி என்று அவன் அவ்வூர் சிவன் கோவிலுக்குள் சென்றான். அங்கு லிங்கத்தின் முன் நைவேத் தியம் செய்ய சாதம் வைக்கப்பட்டு இருந்தது.

அவன் லிங்கத்தை வணங்கி, ''சுவாமி! எனக்கு ஒரே பசியாக இருக்கிறது. இந்த சாதத்தைச் சாப் பிட அனுமதியுங்கள்,'' என வேண்டி னான். அப்போது ஒரு குரல் சாப்பிடு எனக் கூறியதைக் கேட்டு அவன் அந்த சாதத்தைச் சாப்பிட்டுவிட்டான்.

- பாரதீயன் -

அதன் பிறகு அவன், ''சுவாமி! உங்களுக்கு என் நன்றியை எப்படிச் செலுத்துவது என்று தெரியவில்லை. என்னிடம் பணம் காசு என்று எதுவும் இல்லை. என்னிடம் உள்ளது சூதாட்டம் மட்டும் தான். நான் அதில் என் திறமையைக் காட்டி உங்களை மகிழ்விக்கிறேன். அதுதான் நான் உங்களுக்குச் செலுத்தும் நன்றி. ஆனால் சூதாட இருவராவது வேண்டுமே. இப்போது இங்கு நான் ஒருவன் தானே இருக்கிறேன். பரவாயில்லை, உங்களுடனேயே சூதாடுகிறேன். உங்கள் ஆட்டத்தை என் வலது கை ஆடும். என் ஆட்டத்தை என் இடது கையால் நான் ஆடுகிறேன். ஆட்டத்தில் நான் தோற்றால் எனக்கு என்று இருக்கும் என் இந்த ஒரே சட்டையை உங்களுக்குக் கொடுத்துவிடுகிறேன். நீங்கள் தோற்றால் நான் விரும்பும் எதையும் கொடுக்க வேண்டும், சம்மதமா?'' என்று கேட்டான்.

சம்மதம் என்ற ஒரு குரல் கூறியது போல அவன் கேட்டான். உடனே அவன் அங்கே கட்டத்தைப் போட்டு ஆட்டத்தை ஆரம்பித்தான். அவனது வலது கை கடவுளின் ஆட்டத்தை ஆடியது. அவன் தனது ஆட்டத்தை இடது கையால் ஆடினான்.

கொஞ்ச நேரமானதும் அவன் மகிழ்ச்சியுடன், ''கடவுளே! நீங்கள் தோற்றுப் போனீர் கள். எனக்கு நான் விரும்பியதைக் கொடுக்க வேண்டும் என்பது தான் பேச்சு. இந்த அழகான விக்கிரகத்தை எடுத்துக் கொள்கிறேன். இங்கு பல தேவதேவதைகளின் உருவங்கள் உள்ளன. இதிலுள்ள துர்க்கா தேவியின் உருவம் எனக்குப் பிடித்துப் போயிற்று,'' என்றான்.



அப்போது ஒரு குரல், ''இதை எடுத்துப் போனால் உனக்குத் தான் பல சங்கடங்கள். இதற்கு தினமும் முறைப்படி பூஜை செய்ய வேண்டும். மேலும் இதை நீ எடுத்துக் கொண்டு போனால் உன்னைத் திருடன் என்று கூறி காவல்துறையினர் பிடித்துக் கொண்டு போய்விடுவார்கள். அதனால் இதெல்லாம் உனக்கு வேண்டாம். உனக்கு ஒரு நல்ல மனைவி தேவை. அதனால் உனக்கு ஒரு நல்ல பெண்ணை இப்போது அளிக்கப் போகிறேன். நீ என் பின்னால் மறைந்து கொள்!'' என்று ஒலிக்கவே, அவனும் லிங்கத்தின் பின்னால் ஒளிந்து கொண்டான்.

அப்போது தேவலோக நடனமாது திலோத்தமை அங்கு வந்து நடனம்



ஆடினாள். அவளது நடனம் முடிந்ததும் சோமதத்தன் அவள் முன் போய், ''கடவுள் உன்னை மணந்து கொள்ளும்படி எனக்குக் கட்டளை இட்டிருக்கிறார்,'' என்று கூறவே, அவளும் அவனை வியப்புடன் பார்த்து, ''சரி, வா போகலாம்!'' என்றாள். இருவரும் கோவிலுக்கு வெளியே உள்ள தோப்பிற்குச் சென்றார்கள். நிலா வெளிச்சத்தில் திலோத்தமையைக் கண்ட சோமதத்தன் திகைத்து நின்றான்.

திலோத்தமை கலகலவென சிரித்து, ''உன் வீடு எங்கே இருக்கிறது? அதில் வேலைக்காரிகள் இருக்கிறார்களா? உன்னால் என்னை வைத்துக் காப்பாற்ற முடியுமா?'' என்று கேட்டாள்.

சோமதத்தன் எதுவுமே இல்லை என்று கூறவே, அவளும் ''உனக்கு மனைவியோடு ஒரு வீடும் வேண்டும். பணமும் வேண்டும். இந்த நிலையில் உன்னை நான் மணக்க முடியாது. ஏனெனில் நான் தேவ லோகப் பெண். அவள் எந்த மானிடனையும் மணக்கக் கூடாதே!'' என்றாள். பிறகு அவன் காதில் ஏதோ ரகசியமாகக் கூறிவிட்டு அவள் மாயமாய் மறைந்து போனாள்.

சில நாட்களுக்குப் பின் அந்நாட்டு அரசகுமாரியின் நிலை மாறிவிட்டது. அவள் பெயர் கமலலோசனி என்றாலும், அவள் தன்னைத் திலோத்தமை என்று கூறி வரலானாள். அவள் சரியாகச் சாப்பிடாமல் எப்போதும் இந்திர சபையில் தான் இருப்பது போலப் பேசி வந்தாள்.

அவளுக்கு மூளைக் கோளாறு எனக் கூறி வைத்தியர்கள் சிகிச்சை செய்தார்கள். அதனால் எவ்வித பயனும் ஏற்படவில்லை. அவளது உடல் நிலை மிகவும் மோசமாகிவிட்டது. அதனால் மன்னன் தன் மகளின் நோயை குணப்படுத்துபவருக்கு அவர் எதைக் கேட்டாலும் கொடுப்பதாக நாடு முழுவதும் பறை சாற்றுவித்தார்கள்.

சோமதத்தன் ஒருவனுக்குத்தான் அரசகுமாரி அந்த நிலைக்கு வர என்ன காரணம் என்று தெரியும். ஏனெனில் திலோத்தமை, தான் அந்த அரசகுமாரியின் உடலில் புகுந்து கொள்வதாயும் சோமதத்தன் வந்து அரசகுமாரியின் நோயை குணப்படுத்துவதாகக் கூறியதும் போய்விடுவதாகவும் கூறி இருந்தாள்.

சோமதத்தன் அரண்மனைக்குப் போய் மன்னனைக் கண்டு தான் அரச

குமாரியின் நோயைப் போக்குவதாகக் கூறினான். மன்னனும் தன் மகள் எப்படியாவது குணம் அடைந்துவிட்டால் போதும் என எண்ணி அவளுக்கு சிகிச்சை அளிக்க சோமதத்தனை அனுமதித்தான்.

சோமதத்தனும் மன்னனிடம், ''நீங்களும் அரசியாரும் அறைக்கு வெளியே போய் இருங்கள். நான் நோயாளியைப் பரிசோதிக்கும்போது வேறு யாரும் இருக்கக் கூடாது,'' என்றான்.

மன்னனும் அரசியும் அந்த அறையைவிட்டு வெளியே போய் நின்றனர். தனிமையில் விடப்பட்டதும் சோமதத்தன் அரசகுமாரியின் காதில், ''தேவலோக திலோத்தமையே! நீ இவளை விட்டுப் போய்விடு. அப்படிப் போனதற்கு அடையாளமாக ஏதாவது செய்!'' எனக் கூறினான்.

சோமதத்தன் இவ்வாறு கூறியதும் அரசகுமாரி கண்களைத் திறந்து அவனை ஆச்சரியத்துடன் பார்த்து, ''ஆ! நேற்றிரவு நான் உங்களைக் கனவில் கண்டேன். நீங்கள் யார்? நான் எங்கே இருக்கிறேன்? எனக்கு என்ன நேர்ந்தது?'' என்று கேட்டாள்.

சோமதத்தனும், ''என்னைப் பற்றிய கனவா? அதைச் சொல்!'' என்று கேட்க, அவளும் வெட்கத்துடன் ''உங்களிடம் சொல்லமாட்டேன். அது பரம ரகசியம். அதை வேறு யாரிடமும் கூறாமல் என் பெற்றோரிடம் தான் முதலில் சொல்லுவேன்,'' என்றாள்.

தம் மகள் கூறியதைக் கேட்டு மன்னனும் அரசியும் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவில்லை. பிறகு ஒரு நல்ல முகூர்த்தத்தில் சோமதத்தனுக்கும் அரசகுமாரி கமலலோசனிக்கும் திருமணம் நடைபெற்றது.

மன்னன் துறவறம் மேற்கொண்டு நாட்டை சோமதத்தனிடம் ஒப்படைத்துவிட்டுக் காட்டிற்குத் தவம் செய்யச் சென்றான். சோமதத்தன் தான் கடவுளுடன் சூதாடிய கோவிலைப் பெரிதாகக் கட்டினான். ஆனால் நாட்டில் யாருமே சூதாடக் கூடாது என்று அவன் ஆணை பிறப்பித்து, சூதாடிகளுக்கு வேலையும் அளித்தான்.





# கைவிட மாட்டார்!

பரமனூர் குளத்தைத் தூர்வாரும் போது அதிலிருந்து ஒரு பிள்ளையார் சிலை கிடைத்தது. ஊர் பிரமுகர்கள் அதை எடுத்து வந்து ஊரருகே உள்ள குன்றின் மீது கோவில் கட்டி அதில் அதைப் பிரதிஷ்டை செய்தார்கள். அந்தக் கோவிலின் நிர்வாகியாக, இரண்டு வருடங்களாக வேலைக்கு அலைந்தும் ஒரு வேலையும் கிடைக்காமல் திண்டாடிக் கொண்டிருந்த பசுபதியை நியமித்தார்கள். அவனுக்கு ஊதியமும் மிகவும் சொற்பமே. அதைக் கொண்டு அவன் தன் குடும்பத்தை மிகவும் சிரமப்பட்டு நடத்தி வந்தார்கள்.

ஒருநாள் பசுபதி வீட்டிலிருந்து மலைக்கோவிலுக்குக் கிளம்புகையில் அவனது மனைவி பார்வதி, ''என்ன, நீங்கள் எதுவும் செய்யாமல் இருக்கிறீர்கள்? நம் மகளுக்குக் கல்யாணம் செய்ய வேண்டும். மகனை மேல்படிப்பிற்கு பட்டணத்திற்கு அனுப்ப வேண்டும். இதற்கெல்லாம் என்ன செய்யப் போகிறீர்கள்?'' என்று கேட்டாள். பசுபதியும் ''இதற்கெல்லாம் பணம் வேண்டுமே. நான் எங்கே போவேன்? கடவுள்தான் கண் திறக்க வேண்டும்,'' என்று சொல்லிக் கொண்டே தன் வேலையை கவனிக்கச் சென்றுவிட்டான்.

அக்கோவில் மலைப்பிள்ளையாரின் புகழ் சுற்றிலும் பரவலாயிற்று. அந்தப் பிள்ளையாரை வேண்டிக் கொண்டு யார் எந்த வேலையைத் தொடங்கினாலும் அது வெற்றிகரமாகவே நடந்தது. அதனால் பிள்ளையாருக்கு அவர்கள் காணிக்கை செலுத்தினார்கள். கோவிலுக்கும் நல்ல வருமானம் கிடைக்கலாயிற்று.

பார்வதி அடிக்கடி மகளின் திரு

- சோபினி சுவாமி -

மணம் பற்றியும் மகனின் மேற் படிப்பு பற்றியும் பசுபதிக்கு நினைவு படுத்திக் கொண்டே இருந்தாள். பசு பதியும் பார்க்கலாம் என்று சொல் லியே வந்தான்.

ஒருநாள் பார்வதி தன் கணவனி டம், ''நீங்கள் வேலை பார்க்கும் கோவிலுக்கு ஏகப்பட்ட வருமானம் வருகிறதே. காணிக்கையாகக் கிடைக் கும் பணத்தில் நீங்கள் தினமும் கொஞ்சம் எடுத்து வரலாமே! இப் படிச் செய்தால் நம் பிரச்சினைகளைத் தீர்த்துவிடலாமே!'' என்றாள்.

பசுபதிக்கோ தன் மனைவி கூறிய படி செய்வதற்குக் கொஞ்சமும் இஷ் டமே இல்லை. ஆனாலும் ஏதாவது பதிலைச் சொன்னால்தான் மனைவி தொந்தரவு செய்ய மாட்டாள் என்று எண்ணி, ''நீ சொல்வதும் நல்ல யோசனை தான். அதுபற்றி யோசிக் கிறேன்,'' என்று கூறிவிட்டு மலைக் கோவிலுக்குச் சென்றான். அன்று அவன் வரவு செலவு கணக்கு எழுதிக் கொண்டிருக்கையில் ஒரு குடியான வன் ஒரு மூட்டை அரிசியோடு கோவிலுக்கு வந்தான். அவன் பசுபதி யிடம், ''ஐயா! நான் என் சக்திக்கேற்ப பிள்ளையாருக்குக் காணிக்கை செலுத் துகிறேன். இந்த ஒரு மூட்டை அரி சியை ஏற்று தினமும் அன்னம் தயா ரித்து நிவேதனம் செய்து பிரசாதமாக எல்லோருக்கும் கொடுக்கும்படிக் கேட்டுக் கொள்கிறேன்,'' என்று பணி வுடன் கூறி வணங்கி நின்றான்.

அப்போது பசுபதி, ''சரி, நீ பிள் ளையாரிடம் ஏதாவது வேண்டிக் கொண்டு அது நிறைவேறியதும் இக் காணிக்கையை செலுத்துகிறாயா?'' என்று கேட்டான். குடியானவனும், ''ஆமாம். என் மகளுக்கு இரண்டு கால்களும் செயல்படாமல் போய் விட்டன. அது சரியாகி திருமணமும்



நிச்சயமானால் ஒரு மூட்டை அரிசி காணிக்கை செலுத்துவதாக இந்தப் பிள்ளையாரிடம் வேண்டிக் கொண் டேன். பதினைந்து நாட்களுக்கு முன் அவளது கால்கள் சரியாகி நடக்கத் தொடங்கினாள். மூன்று நாட்களுக்கு முன் ஒரு நல்ல இடத்து சம்மந்தமும் கிடைத்தது. என் வேண்டுதல் நிறை வேறியதால் இந்தக் காணிக்கை செலுத்துகிறேன்,'' என்றான்.

அதைக் கேட்ட பசுபதி அப் போதே ஒரு தீர்மானத்திற்கு வந்தான். மறுநாள் பார்வதி வழக்கம் போல மகளின் திருமணம் பற்றி நச்சரிக்கவே, அவனும் ''இதோ பார்! நீ சொல்கிற படி நான் செய்யப் போவதில்லை,'' என்று கூறினான். அப்போது பார்வதி, ''அப்படியானால் மகளின் திருமணத் திற்குப் பணத்திற்கு எங்கே போவீர் கள்?'' என்று கேட்டாள்.

பசுபதியும், ''இதோ பார்! யார் யாரோ எங்கிருந்து எல்லாமோ நம்மூர் மலைப்பிள்ளையாருக்கு வேண்டு தல் புரிந்து காணிக்கையைச் செலுத்து கிறார்கள். அவர்கள் வேண்டிக் கொள் வதும் நிறைவேறுகின்றன. நானும் தினமும் பிள்ளையாருக்குப் பணி புரிந்து வேண்டிக் கொண்டே வருகி றேன். அவர் மற்றவர்களின் வேண்டு தல்களை நிறைவேற்றுவது போல கண்டிப்பாக என் வேண்டுதலையும் நிறைவேற்றுவார். கடமை தவறி னால் தான் சிக்கல்களில் அகப்பட்டுத் தவிக்க வேண்டிவரும். அதனால் கோவில் பணத்தை எடுத்து நம் செலவுகளுக்குப் பயன்படுத்த மாட் டேன்,'' என்று உறுதிபடக் கூறினான்.

பிறகு பார்வதியும், ''ஆமாம். நீங் கள் கூறுவதும் சரியே. நாம் நம் கடமையைச் செய்வோம். பிள்ளை யார் நம்மைக் கைவிட மாட்டார். நமக்கு நற்பலன்களை அளிப்பார்,'' என்றாள்.

பசுபதி எதிர்பார்த்தது வீண் போக வில்லை. ஒரு நண்பனின் உத வியால் அவனது மகளின் திருமணம் நிச் சயமாகியது. அவனது மகன் தேர் வில் நல்ல மதிப்பெண்கள் பெற்று மாநிலத்திலேயே முதலாவது மாணவ னாக வந்தான். அரசாங்கமே அவனது உயர்படிப்பிற்கான பொறுப்பையும் ஏற்றது.



# நம் இந்தியா

***மறைந்த முன்னாள் குடியரசுத் தலைவர் டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணனை கௌரவிக்க நாம் ஆசிரியர் தினத்தைக் கொண்டாடுகிறோம். இம்மாத வினாக்கள் கல்வித் துறையில் சிறந்து விளங்கியவர்களையும், கல்வி நிறுவனங்களையும் பற்றியவை. நீங்கள் எல்லா வினாக்களுக்குமே விடையளிக்க முயன்று பாருங்கள்!***

1. கோல்கத்தாவில் 1955ல் எந்த விஞ்ஞானி அணுவியல் கழகத்தை அமைத்தார்?
2. 1857 நடந்த சிப்பாய் கலகத்தை அடக்கியதற்காக சிம்லாவில் பிரிட்டிஷாரால் கடவுளுக்கு நன்றி செலுத்த ஒரு பள்ளிக்கூடம் அமைக்கப்பட்டது. அதன் பெயர் என்ன?
3. இந்து புராணத்தில் தேவர்களின் குரு யார்?
4. 'பை' என்பதன் இன்றைய மதிப்பைக் கண்டுபிடித்த கணித மேதை யார்?
5. ரூர்க்கி பல்கலைக்கழகம் ஆரம்பிக்கப்பட்டபோது அதற்கு வேறு பெயர் இருந்தது. அந்தப் பெயர் என்ன?
6. ஷேக்ஸ்பியரின் முதல் நாடகத் தொகுப்பின் பதிப்புப் பிரதி கிடைப்பது மிக அரிது. அது இந்தியக் கல்வி நிறுவனம் ஒன்றில் உள்ளது. அந்தக் கல்வி நிறுவனத்தின் பெயர் என்ன?
7. ரவி ஜே. மத்தாய் குஜராத்தில் நிறுவிய முதலாவது கல்வி நிறுவனத்தின் பெயர் என்ன?
8. மைசூர் பல்கலைக்கழககத்தின் ஒரு துணை வேந்தர் முன்பு படியாலா சமஸ்தானத்தில் அமைச்சராக இருந்தார். அவர் யார்?

*(விடைகள் அடுத்த இதழில்)*

## ஆகஸ்ட் வினாக்களின் விடைகள்

1. ஆர்.கே. சண்முகம் செட்டியார்.
2. டாக்டர் ஜாகிர் ஹுசைன் (ஒரு வருடம் 11 மாதம் 20 நாட்கள்).
3. 1989.
4. பிரதம மந்திரி அடல் பிஹாரி வாஜ்பாய்.
5. ஐம்பது.
6. துணை சபாநாயகர், மாநிலங்கள் அவை.
7. ஆந்திரப் பிரதேசம்.
8. மாஹி - பாண்டிச்சேரி மாநிலம்.
9. கர்நாடகம் - சிரவணபெலகோலா.
10. லட்சத் தீவுகள்.
11. ஜி.பி. பந்த் விவசாயப் பல்கலைக்கழகம்.
12. டூராண்டு கோப்பை.
13. ஷஹீத், ஸ்வராஜ்.
14. கர்ஸன் பிரபு.



# தூங்காதே தம்பி! தூங்காதே!

நல்லூரில் நடேசனின் மனைவி திருமணமாகி பத்து வருடங்களுக்குப் பிறகு ஓர் ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். பிறந்த அக்குழந்தை அழவில்லை. கண்களைத் திறக்கவே இல்லை. கிள்ளினால் உடல் மட்டும் அசைந்தது. ஆனால் வாய் திறந்து கத்தவே இல்லை. இதைக் கண்டு அத்தம்பதிகள் என்ன செய்வது என்று தெரியாமல் திகைத்தார்கள்.

இப்படியே ஐந்து நாட்கள் கழிந்தன. அப்போது அந்த ஊருக்கு ஒரு சாது வந்தார். நடேசன் அவரைக் கண்டு தன் மகனைப் பற்றிக் கூறவே, அவரும் குழந்தை பிறந்த நாள், நட்சத்திரம், நேரம் ஆகியவற்றைக் கேட்டுத் தெரிந்துகொண்டு கண்ணை மூடிக்கொண்டு யோசித்தார். பிறகு அவர் நடேசனிடம் ''கவலைப் படாதே! இந்தக் குழந்தைக்கு கும்பகர்ணனின் அம்சம் இருக்கிறது. திரேதாயுகத்தில் ராவணன் ராமருடன் போர் புரிந்தபோது அதற்குச் செல்ல கும்பகர்ணன் பாதித் தூக்கத்தில் எழுந்தான். அதனால் இந்தப் பிறப்பில் அவன் இந்தக் குழந்தையாகப் பிறந்திருக்கிறான். இக்குழந்தை சில வருட காலத்திற்கு தூங்கியவாறே இருக்கும். கத்தினாலோ அல்லது அழுதாலோ தன் தூக்கம் கலைந்துவிடும் என்றே இது அவ்வாறு செய்யாமல் இருக்கிறது,'' என்றார்.

அதைக் கேட்டு நடேசனின் மனம் ஆறுதல் அடைந்தது. சாது சொன்னதை அவன் தன் மனைவி சிவகாமியிடம் கூறவே அவளும் மனம் தேறினாள். கும்பகர்ணனின் அம்சமான அக்குழந்தைக்கு அவர்கள் கும்பையன் என்று பெயர் வைத்தார்கள். அக்குழந்தை எல்லாக் குழந்தை

- கௌரிநாதன் -

களைப் போல வேளாவேளைக்குப் பால் குடித்தும் மலஜலம் கழித்தும் வந்தது. ஆனால் எப்போதும் தூங்கிக் கொண்டே இருந்தது.

சிவகாமி தன் குழந்தைக்கு வேளா வேளைக்கு நல்ல சத்தான உணவு கொடுத்து வந்ததால் அது கொழுத்துப் பருத்துக் கொண்டே போயிற்று. ஐந்து வயதானதும் கும்பைய்யன் பள்ளி யில் சேர்க்கப்பட்டான். அங்கும் பெரும் பகுதி நேரத்தைத் தூங்கியே கழித்தான். பருமனான உடலைக் கொண்டு நடக்கக்கூட அவனால் முடியவில்லை. அவனோடு படிக் கும் மாணவர்கள் அவனைச் சீண்டி வேடிக்கை பார்க்கலானார்கள்.

கும்பைய்யனுக்கு பதினாறு வயது நிரம்பியது. அவனது உருவம் தான் பெரிதாயிற்று. படிப்பும் ஏறவே இல்லை. அவன் அநேகமாகத் தூங் கிக் கொண்டே இருநததால் எல் லோரும் அவனைக் கண்டு அனு தாபப்பட்டார்கள். ஆனால் நடேச னும் சிவகாமியும் அவனது எதிர் காலம் பற்றியே பெரிதும் கவலைப் பட்டார்கள். அவனைத் திருத்தி எல்லோரையும் போல இருக்கச் செய்ய அவர்கள் மேற்கொண்ட முயற்சிகள் எல்லாம் பயனளிக்கவே இல்லை. இச்சமயத்தில் குழந்தை யாக கும்பைய்யன் இருந்தபோது வந்த சாது மீண்டும் அந்த ஊருக்கு வந்தார்.

அவர் கும்பைய்யனின் செயல் களை ஒருநாள் முழுவதும் கவ னித்தார். பிறகு ''தூக்கம் ஒன்றுதான் இவனிடம் உள்ள குறை. மற்றபடி இவன் சரியாகவே இருக்கிறான். இவனது தூக்கமும் இனிமேல் வெகு நேரம் இராது. இவனுக்கு நான் கல்வி



புகட்டுகிறேன். இவனுக்கு இனி எதையும் சட்டென கிரகித்துப் புரிந்து கொள்ளும் சக்தி வந்துவிட்டது. இனி முன்போலத் தூங்கமாட்டான்,'' என்றார். அன்றிலிருந்து அவர் கும் பைய்யனுக்கு பாடங்களைச் சொல் லிக் கொடுக்க அவன் நன்கு படித்து எழுதி சிறந்த அறிவாளியாக ஆனான்.

அதன் பிறகு அவர் அவனிடம், ''இனி நீ முன்போலத் தூங்கமாட் டாய். எல்லோரையும் போல இரவில் தூங்குவாய். அதுபோல எல்லோரை யும் போல உணவு உண்டால் உன் உடலின் பருமன் குறையும். நீயும் நடமாடலாம். அதனால் நீ அதிக நேரம் தூங்காதே. இரவில் மட்டும் தூங்கு. அதுவும் உன் பாடங்களைப் படித்த பிறகே!'' என்றார்.

கும்பைய்யன் படிப்பில் கவனம் செலுத்தியதால் தூக்கத்தை மறந் தான். கற்கக் கசடறக் கற்க கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக என்ற திருக்குறளை நினைத்துக் கொண்டு படிப்பு, உணவு, செய்யும் வேலை ஆகியவற்றை அளவாகச் செயல் படுத்தினான்.

இவ்வாறு செய்ததால் வெளி உல கைப் பற்றி அவன் எல்லாவற்றையும் தெரிந்து கொண்டான். 'இவ்வளவு காலமாக தான் தூங்கிக் கொண்டே இருந்ததால், உலகின் அற்புதப் படைப்புகள் பற்றி அறியாமல் இருந்தேனே!' என அவன் மனம் வருந்தினான்.

அவன் சாதுவை வணங்கி, ''ஐயா! கும்பகர்ணனின் அம்சம் என்னிட மிருந்து முற்றிலும் மறைந்துவிட் டது. தூங்காதே தம்பீ, தூங்காதே!'' என நீங்கள் கூறி எனக்குக் கல்வி புகட்டினீர்கள். நான் மேலும் மேலும் பல சாத்திரங்களைப் படித்து பேர றிஞன் என்ற பெயர் பெறுவேன். அப்படி நான் ஆகும்படி ஆசிகள் அளியுங்கள்,'' என்றான்.

சாதுவும், ''இப்போது நீ எல்லோ ரையும் போலாகிவிட்டாய். இனி எந்தக் குறையும் இன்றி அனைத்து சுகங்களையும் பெற்று வாழ்வாய்!'' எனக்கூறி ஆசிகள் அளிக்கவே, கும்பைய்யன் வெகுவிரைவிலேயே யாவராலும் பேரறிஞன் எனப் பாராட்டப்பட்டான்.





# மறந்துவிடாதீர்கள்!

தசரதபுரத்து ராமர் கோவில் ஒரு முறை பலத்த மழையாலும் காற்றாலும் கொஞ்சம் சேதமுற்றது. அதனால் ஊர்ப்பிரமுகர்கள் சிலர் ஒன்றுகூடி நன்கொடை வசூலித்து பழுதடைந்த இடங்களை நேர்ப்படுத்த முடிவு செய்தார்கள். அதற்காக அந்த ஊரிலேயே மிகப்பெரிய பணக்காரரான பழனிவேலரிடம் ஒரு பெருந்தொகையை நன்கொடையாக வசூலிப்பது எனத் தீர்மானித்தார்கள். அவரை நன்கு பாராட்டி நன்கொடையைக் கறந்துவிட வேண்டும் என்பது அவர்களது திட்டம்.

பழனிவேலர் சீக்கிரத்தில் மசியக் கூடியவரல்ல. ஊரின் சில பிரமுகர்கள் கூட்டமாக வந்தது கண்டு அவர்கள் கோவிலுக்கு நன்கொடை கேட்கத்தான் வந்திருக்கிறார்கள் என்பதைப் புரிந்து கொண்டு எச்சரிக்கையுடன் இருக்கலானார். அப்போது கோவிலின் தர்மகர்த்தா பழனிவேலரிடம், ''சேதமாகியுள்ள நம் ராமர் கோவிலைப் பழுது பார்க்க பதினைந்தாயிரம் ரூபாய் செலவாகலாம். நீங்கள் ராம பக்தர். தினமும் இருவேளை தவறாமல் தரிசனம் செய்ய வருகிறீர்கள், ஊரில் பெரிய பணக்காரர். அதனால் முதலில் உங்களது நன்கொடை இருக்க வேண்டும் என்று எண்ணியே நாங்கள் வந்திருக்கிறோம்,'' என்றார்.

கணக்குப் பிள்ளை கனகராசுவும், ''ஐயாவின் புகழ் என்ன! பெருமை என்ன!! நம் ஊரைச் சுற்றியுள்ள வயல்களில் பாதிக்கு மேல் இவருடையது தானே. ஐயாயிரம் ரூபாய் நன்கொடை யாகக் கொடுப்பது சிரமமே இல்லை,'' என்றார் குழைந்தவாறே.

அதைக் கேட்ட பழனிவேலர் புன்னகை புரிந்தவாறே, ''இதோ பாருங்கள்! ஒருவர் நமக்கு தானமாகக் கொடுத்ததை அவருக்கே திருப்பிக் கொடுப்பது அவரை அவமானம் செய்தது போலாகும். அந்த ராம

- ரம்யா குருமூர்த்தி -

பிரான் தான் எனக்கு வீடு, வயல், பணம் என்று கொடுத்திருக்கிறார். எனவே அவர் கொடுத்த பணத்தில் இருந்து கொஞ்சம் எடுத்து நன் கொடையாகக் கொடுத்தாலும், ஸ்ரீராமபிரானை நான் அவமானம் செய்தது போலாகிவிடும். அதனால் நானும் என் மகனும் கோவில் சீர் திருத்தப் பணிகளுக்கு எங்கள் உடல் உழைப்பை அளிக்கிறோம். அதுவே எங்கள் நன்கொடை என்று ஏற்றுக் கொள்ளுங்கள்,'' என்றார்.

அப்போது நகைக்கடை நாரா யணன், ''ஐயா! தாங்கள் கொடுக்கும் உடல் உழைப்பையும் நன்கொடை யாக ஏற்கிறோம். மேலும் இந்தப் பதி னைந்தாயிரம் ரூபாயைத் திரட்ட நாங்கள் ஒரு திட்டம் தீட்டி இருக் கிறோம். அதன்படி நாளை முதல் கோவிலுக்கு ராமபிரானை தரிசிக்க வருவோர் தரிசனக் கட்டணம் என்று அவரவர் அந்தஸ்திற்கு ஏற்ப தரிசன அனுமதிச் சீட்டு வாங்க வேண்டும். இந்தச் சீட்டுகள் மூன்று வகை. ஒரு ரூபாய், ஐம்பது ரூபாய், நூறு ரூபாய் என்பன. தாங்கள் ராம பக்தர். இந்த ஊரில் பணக்காரர்களிலேயே முத லிடம் வகிப்பவர். தினமும் காலை யிலும் மாலையிலும் ராமபிரானைத் தரிசிக்கக் கோவிலுக்கு வருகிறீர்கள். அதனால் நீங்கள் ஒரு நாளைக்கு இரு நூறு ரூபாய் கொடுப்பீர்கள். தங்கள் அந்தஸ்திற்கு ஒருமுறை தரிசனம் செய்ய நூறு ரூபாய்தாராளமாகக் கொடுப்பீர்கள் அல்லவா?'' என்றார்.

அதைக் கேட்ட பழனிவேலர் திடுக் கிட்டார். ஒரு நாளைக்கு இருநூறு ரூபாய் வீதம் ஒரு மாதத்திற்கு ஆறா யிரம் ரூபாய் ஆகிறது. நன்கொடை யாளர்கள் தரிசனச் சீட்டு வாங்க வேண்டியதில்லை என்பதால் அவர் ஐயாயிரம் ரூபாய் நன்கொடை கொடுப்பதே லாபகரமானது என்று யோசித்து அறைக்குள் போய் ஐயா யிரம் ரூபாய் எடுத்து வந்து கோவில் தர்மகர்த்தாவிடம் கொடுத்தார்.

அவரும் அதை வாங்கிக் கொண்டு ''மிக்க நன்றி. நீங்கள் உடல் உழைப் பையும் நன்கொடையாகக் கொடுப் பதாகக் கூறினீர்கள். அதை மறந்து விடாதீர்கள்,'' என்றார் சிரித்துக் கொண்டே.






## பூசணி பூதம்!



தமிழ்நாட்டில புதிதாகக் கட்டப்பட்ட வீட்டு வாசலில் ஒரு பூசணிக்காய் கட்டப் பட்டிருக்கும். அதன் மீது வண்ணங்களில் பூதத்தின் முகம் பயங்கரமாக வரையப் பட்டிருப்பதைக் காணலாம். இவ்வாறு செய்வதால் புதிய வீட்டிற்குப் பிறரின் கண்படாது என்று திருஷ்டி கழித்து இப் பூசணியை எடுத்துப் போட்டு உடைக் கிறார்கள். இம்மாதிரி பூசணிக்காய்களை புதிய தொழில்கள் ஆரம்பிக்கும்போதும், மோட்டார், பஸ், லாரி, மோட்டார் சைக்கிள், ஆட்டோ ரிக்ஷாக்கள் போன்ற வாகனங்களை வாங்கியதும் 'திருஷ்டி' கழிப்பதாகக் கருதி போட்டு உடைக்கும் பழக்கமும் பரவலாக உள்ளது.

## தெய்வமா அவன்!

மகாபாரதத்தில் கூறப்பட்டு உள்ள குரு வம்ச அரசகுமார னான துரியோதனனைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? பொறாமைக்காரன், கொடிய வன், நயவஞ்சகன், ஏமாற்று பவன் என்றெல்லாம் தானே கூறுவீர்கள்! ஆனால் நீங்கள் நினைப்பதற்கு நேர்மாறாக யமு னைப் பள்ளத்தாக்கின் மேற்குப் பகுதியில் உத்திரகாசியில் வாழ் பவர்கள் அவனை தெய்வமாகக் கருதி வழிபட்டு வருகிறார்கள். இதை அறிந்ததும் நீங்கள் துரி யோதனன் தெய்வமா என்று எண்ணித் திகைத்துத் தானே போகிறீர்கள்!



## கோவா மாநில கிராமியக் கதை

கோவா மாநிலம் கோவா, டையூ, டாமன் என்ற பகுதிகளைக் கொண்டது. இந்தியாவின் மேற்குக் கடற்கரையில் அமைந்துள்ள கோவா போர்த்துக்கீசியர் கடல் வழியாக வந்து வியாபாரம் செய்ய ஏற்றதாக இருந்தது. 1961 வரை கோவா போர்த்துக்கீசியரின் ஆட்சியின்கீழ் இருந்தது. அதன்பின் அது இந்திய யூனியன் பிரதேசமாகி 1987 மே 30ல் மாநில அந்தஸ்தைப் பெற்றது.

மேற்குத் தொடர்ச்சி மலையின் சஹ்யாத்ரி மலைச்சாரலில் அமைந்துள்ள கோவாவின் வடக்கே மகாராஷ்டிரமும் தெற்கிலும் கிழக்கிலும் கர்நாடகமும் மேற்கே அரபிக் கடலும் உள்ளன. இதன் மக்கள்தொகை 1,343,998, பரப்பளவு 3702 ச.கி.மீ. ஆகும். கொங்கணி இதன் ஆட்சி மொழியாகும். ஆங்கிலம், மராட்டி, போர்த்துகீஸ் மொழிகளும் இங்கு பேசப்படுகின்றன.

கோவா என்ற பெயர் வர பல விதக் காரணங்கள் கூறப்படுகின்றன. கோமந்தசலா, கோட்காபட்டண, கோவாபுரி, கோவாராஷ்டிரா என்ற பெயர்களை போர்த்துகீசியர் குறுக்கி கோவா என்ற பெயரை வைத்தார்களாம். அநேகமாக இப்பெயர்கள் இம்மாநிலத்தில் பாயும் கோமதி நதியுடன் தொடர்பு கொண்டதாக இருக்கலாம். தற்போது கோமதி நதியை மாண்டோவி என்ற பெயரில் கூறி வருகிறார்கள்.

# பாடும் சிங்கம்

கோவாவில் வெகுகாலத்திற்கு முன் ஒரு வியாபாரி இருந்தான். அவன் தொலைதூரத்து நாடுகளுடன் கப்பலில் சரக்கு அனுப்பி வியாபாரம் செய்து வந்தான். ஒருநாள் அவனது மூத்த மகன் ருத்திரேஷ் கப்பலில் சரக்குகளை ஏற்றிக் கொண்டு வியாபாரம் செய்ய அயல்நாடுகளுக்குக் கிளம்பினான். அவனது கப்பல் ஓர் அழகிய தீவை அடைந்தது.



அவன் கரையில் இறங்கியதும் ஒரு பலகையில் எழுதப்பட்டிருந்த தைப் படித்தான். அதில் 'எங்கள் இள வரசி மாயா காணாமல் போய்விட் டாள். யாராவது அவளை ஒரு வாரத் திற்குள் கண்டுபிடித்துக் கொண்டு வந்தால் அவளை மணக்கலாம். குறித்த காலத்துள் அவளைக் கண்டு பிடிக்க முடியாவிட்டால் அம்முயற்சி யில் ஈடுபட்டவர் சிறையில் அடைக் கப்படுவதோடு அவரது உடமைகள் யாவும் பறிமுதல் செய்யப்படும்,'' என்று எழுதப்பட்டிருந்தது.

இதைப் படித்த பின் ருத்திரேஷ் அரசகுமாரியைக் கண்டுபிடிக்கத் தீர்மானித்துக் கொண்டான். அதனால் அவன் அரண்மனைக்குப் போய் மன்னனைக் கண்டு, ''அரசே! நான் அயல்நாட்டிலிருந்துவந்த வியாபாரி. இன்று தான் இத்தீவிற்கு வந்தேன். நான் ஒரு வாரத்திற்குள் தங்கள் மகளைக் கண்டுபிடித்து தங்கள் முன் கொண்டு வந்து நிறுத்துகிறேன். அதைச் செய்யத் தவறினால் நீங்கள் என்னை தண்டிக்கலாம்,'' என்றான்.

ருத்திரேஷ் ஒரு பிச்சைக்காரனின் வேஷத்தில் அந்த சிறிய தீவின் மூலைமுடுக்குகளில் எல்லாம் அரச குமாரியைத் தேடினான். ஆனால் அவள் எங்குமே தென்படவில்லை. ஒரு வார காலம் முடிந்தது. மன்னன் ருத்திரேஷை சிறையில் அடைத்த தோடு அவனது கப்பலில் இருந்த சரக்குகளைப் பறிமுதல் செய்தான். பல மாதங்கள் கழிந்தன. ருத்திரேஷ் திரும்பி வராததால் அவனது தந்தை



மிகவும் கவலைப்பட்டார். அதனால் அவர் தன் இரண்டாவது மகனான நாகேஷிடம், ''நீயும் கப்பலில் சரக்கு களை ஏற்றிக் கொண்டு ருத்திரேஷ் போன வழியிலேயே செல். அப் போது ஒருவேளை நீ அவனைச்

## கைவினைப்பொருள்கள்

கோவாவின் கலாச்சாரம் போர்த் துக்கீசிய, இந்தியக் கலாச்சாரங்கள் இரண்டும் கலந்தது. இதை இங்கு தயா ரிக்கப்படும் கைவினைப் பொருட்க ளில் காணலாம். இங்கு பிரபலமான கைவினைப் பொருள்கள் வைக்கோல் தொப்பிகள், மூங்கிலால் செய்யப் பட்ட பொருள்கள், மண்பாண்டங்கள், மரவேலை, கடல் சிப்பி, காகிதத் தாலான பொருட்கள், கலையம்ச முள்ள பாய்கள் மற்றும் துணிகளில் பூவேலை, அச்சடிப்பு, பொம்மைகள் தயாரித்தல் போன்றவை ஆகும்.

சந்திக்கலாம்,'' என்று கூறி அனுப்பி வைத்தார்.

நாகேஷும் ருத்திரேஷ் போய்ச் சேர்ந்த தீவையே அடைந்தான். கடற்கரையில் இருந்த பலகையில் எழுதப்பட்டிருந்த அறிவிப்பைப் படித்துவிட்டு அரசகுமாரியைக் கண்டுபிடிக்கும் நோக்கத்துடன் தீவின் மன்னனைக் கண்டு பேசினான். மன்னனும் அரசகுமாரியைத் தேட அவனுக்கு அனுமதி அளித்தான். நாகேஷும் ஒரு சோதிடனின் வேடத்தில் வீடுவீடாக சென்று பார்த்தான். எங்கும் அரசகுமாரி இல்லை. ஒரு வாரம் ஆகிவிடவே நாகேஷும் சிறையில் அடைக்கப்பட்டான். அவனது கப்பலும் சரக்குகளோடு பறிமுதல் செய்யப்பட்டது.

சில மாதங்கள் கழிந்தன. கப்பலில் போன ருத்திரேஷும் நாகேஷும் திரும்பி வராமல் போகவே, அவர்களது தந்தை தன் கடைசி மகனான மங்கேஷைக் கூப்பிட்டு, ''கப்பலில் போன உன் இரு சகோதரர்கள் திரும்பி வரவில்லை. நீ போய்ப் பார்த்து வா!'' எனவே, மங்கேஷும் ஒரு கப்பலில் சரக்குகளை ஏற்றிக் கொண்டு கடலில் சென்று தன் இரு சகோதரர்கள் அடைந்த தீவிற்கே போய்ச் சேர்ந்தான். அவனும் கடற்கரையில் உள்ள பலகையில் எழுதி இருந்ததைப் படித்துவிட்டு, ''என் சகோதரர்கள் இதைப் படித்துவிட்டு அரசகுமாரியைத் தேடிப்போய் கண்டுபிடிக்க முடியாமல் சிறைப்பட்டிருக்க வேண்டும்,'' என ஊகித்துவிட்டான்.

அதனால் அவன் எச்சரிக்கையுடன் ஊருக்குள் போய் பலரிடம் விசாரித்துப் பார்த்தான். யாராலும் அவர்களைப் பற்றிக் கூற முடியவில்லை. ஒரு பால்காரக் கிழவி மட்டும் ''இரு அயல்நாட்டவரைப் பார்த்தேன். ஒருவன் பிச்சைக்காரனைப் போலவும், மற்றவன் சோதிடன் போலவும் திரிந்து கொண்டிருந்தார்கள். அவர்கள் அரசகுமாரியைக் கண்டுபிடிக்க முடியாமல் சிறையில் அடைபட்டுக் கிடக்கிறார்கள்,'' என்றாள்.

மங்கேஷும், ''பாட்டீ! அவர்கள்



என் சகோதரர்கள். அவர்களை எப்படியாவது விடுவிக்க வேண்டும்,'' என்றான். கிழவியும், ''அரசகுமாரி மாயா அரண்மனைக்கு அடியில் உள்ள பாதாள மாளிகையில் தான் இருக்க வேண்டும். அந்த மாளிகையை யாருமே அடைய முடியாது,'' என்றாள்.

அப்போது அவன், ''பாட்டீ! நீதான் யோசித்து அங்கு போக ஒரு வழி சொல்!'' என்று வேண்டினான். கிழவியும் சற்று யோசித்துவிட்டு ஓர் உபாயத்தைக் கூறவே, மங்கேஷும் ''இதுவே சரி. இதன்படியே செய்து விடுகிறேன்,'' என்றான்.

அவள் கூறியபடி மங்கேஷ் ஒரு பொற்கொல்லனைப் பார்த்தான். அவனிடம் ஓர் ஆள் நுழையக் கூடிய படி ஒரு சிங்க உருவத்தைத் தங்கத்தால் செய்யும்படிக் கூறினான். அவனும் அதைச் செய்து கொடுத்தான். மங்கேஷ் அந்த சிங்கத்துள் புகுந்து ஒளிந்து கொண்டான். கிழவி அந்த சிங்கத்தை எடுத்துக் கொண்டு போய் அத்தீவின் மன்னன் முன் வைத்து, ''இந்தத் தங்கச் சிங்கம் பாடும்!'' என்று கூறவே, மன்னனும் ''எங்கே பாடச் சொல்?'' என்றான்.

கிழவியும் ''சிங்கமே! ஒரு பாட்டு பாடு!'' எனவே, அது இனிய குரலில் பாடியது. அதைக் கேட்ட மன்னன் ''இதன் விலை என்ன?'' என்று கேட்க, கிழவியோ ''இதை விற்க மாட்டேன். வேண்டுமானால் இதை ஒரு நாளைக்கு வைத்துக் கொண்டிருந்துவிட்டுக் கொடுங்கள். இதை



நாளையே நான் என் வீட்டில் தங்கியுள்ள அயல்நாட்டு வியாபாரிக்குத் திருப்பிக் கொடுக்க வேண்டும்,'' என்றாள்.

மன்னனும் மறுநாள் காலையில் அந்தத் தங்கச் சிங்கத்தைத் திருப்பிக் கொடுப்பதாகக் கூறவே, கிழவியும் சம்மதித்து, அதை மன்னனிடம் விட்டுவிட்டுச் சென்றாள். மன்னன் அந்தச் சிங்கம் பற்றித் தன் மனைவியிடம் கூறவே, அவளும் ''இதை நம் மகள் பார்த்தால் மகிழ்வாள். அதனால் இதை இப்போதே பாதாள மாளிகைக்குக் கொண்டு செல்வோம்,'' என்றாள்.

சிங்கத்தினுள் மறைந்திருந்த மங்கேஷிற்கு அவர்கள் பேசுவதைக் கேட்கவும், அவர்களது செயல்களைப் பார்க்கவும் முடிந்தது. ஏனெனில்

தங்கச் சிங்கம் அவ்வாறு செய்யப் பட்டு இருந்தது.

மன்னன் அந்த சிங்கத்தைத் தன் அறைக்குள் கொண்டு போனான். அங்கு விரிக்கப்பட்டிருந்த விரிப் பைச் சுருட்டிவிட்டு ஓரிடத்தில் இருந்த கல்லை நகர்த்தினான். அங்கு பாதாள மாளிகைக்குச் செல்லும் வழி இருந்தது. அதன் வழியே அவன் தங்கச் சிங்கத்தை எடுத்துக் கொண்டு போய் தன் மகள் இருக்கும் அறையை அடைந்தான். அங்கு மாயா தன் தோழிகளுடன் இருந்தாள். மன்னன் அவளைக் கட்டித் தழுவி தான் கொண்டு வந்துள்ள சிங்கத்தைப் பற்றிக் கூறினான். அவளும் மகிழ்ந்து போய், ''அப்படியானால் இதைப் பாடச் சொல்லி கேட்டுகிறேன். அது சரி, நான் எப்போது நம் அரண் மனைக்கு வர அனுமதிப்பீர்கள்?'' என்று கேட்டாள்.

மன்னனும் ''கொஞ்சம் பொறுத் துக் கொள். நம் பொக்கிஷம் நிரம் பவே நான் உன்னை இங்கு மறைத்து வைத்து அயல்நாடுகளிலிருந்து வரு பவர்களின் பணத்தைத் தந்திரமாகப் பறித்து வருகிறேன். விரைவிலேயே நீ அங்கு வந்துவிடுவாய். நாளைக் காலையில் வந்து இந்த சிங்கத்தை எடுத்துச் செல்கிறேன்,'' என்று கூறிவிட்டுப் போனான்.

அரசகுமாரி சிங்கத்தைப் பல பாடல்களைப் பாடச் சொல்லி கேட்டு மகிழ்ந்தாள். சிங்கத்தினுள் மறைந்திருந்த மங்கேஷும் அரச குமாரியை நன்கு பார்த்து வைத்துக் கொண்டான்.

மறுநாள் காலையில் மன்னன் வந்து சிங்கத்தை எடுத்துக் கொண்டு போய் தர்பாரில் காத்திருந்த கிழவி யிடம் அதைக் கொடுத்தான். கிழவி யும் அதைத் தன் வீட்டிற்குக் கொண்டு போனாள். அங்கு மங்கேஷ் சிங்கத் திலிருந்து வெளியே வந்தான்.

மறுநாள் மங்கேஷ் மன்னனைக் கண்டு தான் அரசகுமாரியைக் கண்டு பிடித்துக் கொண்டு வருவதாகக் கூற, மன்னனும் அதற்கு அனுமதி அளித்

## நடனங்கள்



கோவாவின் நாட்டுப்புற நடனங் களில் அம்மாநிலத்தின் பண்பாட் டைக் காணலாம். ஃபுட்ஜீ என்பது பிரபலமான கிராமிய நடனம். இதில் பெண்கள் மட்டுமே நடனம் ஆடு கிறார்கள். இவ்வகை நடனங்களை விசேஷ காலங்களில் நடைபெறு கின்றன. தாலோ என்பதும் பெண்கள் மட்டுமே ஆடும்ட மற்றொரு நடனம். கோர்ரன்டின்ஹோ என்பது போர்த் துக்கீசிய கிராமிய நடனம். இதில் தாளத்திற்கும் காலடிகள் எடுத்து வைப்பதற்கும் முதலிடம் அளிக்கப் படுகிறது. கோஃப், குன்ஹி, கோடே மோட்னி, ரோமா என்பனவும் சில பிரபல நடனங்கள்.

தான். அவனும் அரசகுமாரியைத் தேடுவது போல ஆறு நாட்கள் பாவனை செய்துவிட்டு ஏழாவது நாள் மன்னனைக் கண்டான்.

அவன் மன்னனிடம், ''அரச குமாரி வெளியில் எங்கும் இல்லை. அரண்மனைக்குள் தான் எங்கோ இருக்கிறாள். அரண்மனைக்குள் தேட எனக்கு அனுமதி கொடுங்கள்!'' எனவே, மன்னனும் சிரித்தவாறே அனுமதி அளித்தான்.

மங்கேஷும் பல அறைகளில் தேடுவது போல நடித்துவிட்டு மன்னனின் அறைக்குள் போய் தரை விரிப்பை சுருட்டி வைத்துவிட்டுக் கல்லை நகர்த்திவிட்டு அதில் தென் பட்ட வழியில் பாதாள மாளிகையை அடைந்தான்.

அங்கு அவன் மாயாவைக் கண்டு, அவளை மன்னன் முன் கொண்டு போய் நிறுத்தி, ''இதோ உங்கள் மகள்!'' என்றான். மன்னன் திகைத்துப் போனாலும் அவனைப் பாராட்டித் தன் மகளை அவனுக்குத் திருமணம் செய்து வைத்தான். அச்சமயத்தில் சிறைக் கைதிகள் யாவரும் விடுதலை செய்யப்பட்டனர். அவர்களில் ருத்திரேஷும் நாகேஷும் இருந்தனர்.



மங்கேஷ் தன் சகோதரர்களைக் கண்டு மகிழ்ந்தான். அவர்களிடம் தான் அரசகுமாரியை கண்டுபிடித்தது எப்படி என்பதை விவரமாகக் கூறவே, அதுகேட்டு அவர்கள் மிகவும் மகிழ்ந்து தம் தம்பியை வெகுவாகப் பாராட்டினார்கள்.

பிறகு மங்கேஷ் தன் மனைவி மாயாவுடனும், இரு சகோதரர்களுடனும் அத்தீவிலிருந்து தன் ஊருக்குக் கப்பலில் திரும்பிச் சென்றான்.

## உணவு வகைகள்

கோவா ஏலக்காய், கிராம்பு போன்ற வாசனைத் திரவியங்களுக்குப் பெயர் பெற்றது. இங்கு சமையலில் இவை அதிகமாகச் சேர்க்கப்படும். இங்கு சமையலில் தென்னிந்திய, வட இந்திய, போர்த்துக்கீசிய சமையல் முறைகள் கலந்துள்ளன. கடற்கரை ஓரமாக இருப்பதால் மீனும் மற்ற கடல்வாழ் உயிரினங்களும் பிடிக்கப்பட்டு உணவாக உண்ணப்படுகின்றன. பேனி என்பது இங்கு தயாரிக்கப்படும் ஒருவகை மது. இது முந்திரி, தென்னை, பனை மரங்களிலிருந்து இறக்கப்படுகிறது.

# செய்திச் சுடர்

## வட துருவத்தில் இந்தியப் பெண்மணி

கேரளாவைச் சேர்ந்த ராசேல்தாமஸ் என்ற பெண்மணி வட துருவத்தில் இறங்கிய முதலாவது இந்தியப் பெண்மணி. சென்ற ஏப்ரலில் இவர் முதலாவது குதிப்பு முயற்சியில் இறங்கி வெற்றி கண்டவர். இவர் மைனஸ் 50 டிகிரி செல்சியஸ் தட்பவெப்ப நிலையில் 1000 அடி உயரத்தில் இருந்து குதித்தவர். அங்கிருந்து இவரை அழைத்து வரும்வரை இவர் மீனையும் 'ரெயின்டீர்' மாமிசத்தையும் உண்டு கொண்டு இருந்தார்.




திருமதி. தாமஸின் மகள் ஆன்னி ஒரு காலத்தில் மிஸ். இந்தியாவாக இருந்தவர். திருமதி. தாமஸ் இருபத்தைந்து ஆண்டுகளாக வானத்திலிருந்து குதித்துப் பழகியவர்.

## கோவிலுக்குப் புதிய தாழ்ப்பாள்

புரியின் ஜகன்நாதர் ஆலயத்தின் தலை வாசல் கதவிற்குப் புதிய தாழ்ப்பாள் பொருத்தப்பட்டுள்ளது. இதன் பூட்டு 2 அடி உயரம், 1 அடி அகலம், 50 கிலோ எடையுள்ளது. இதை ஒரு தொழிலகம் ரூ.30,000க்கு மூன்று மாத காலத்தில் செய்து கொடுத்தது. இதற்கு மூன்று பித்தளை சாவிகள் உள்ளன. ஒவ்வொரு சாவியும் 36 செ.மீ. (15 அங்குலம்) நீளமானது. அந்தத் தொழிலகம் செய்து கொடுத்து இந்தப் பூட்டுதான் அதிக கனமானது என்று எண்ணிவிட வேண்டாம். 1961ல் டில்லியில் நடந்த உலக வணிகக் கண்காட்சியில் இந்த நிறுவனம் 80 கிலோ எடையுள்ள பூட்டைச் செய்து வைத்திருந்தது.





# விநாயகர்

கணங்களின் அதிபதியாகும் பட்டாபிஷேகத்தின் போது விநாயகர் உடுத்திக் கொள்ளப் பளபளக்கும் வண்ணப் பட்டாடைகளை பார்வதி தேவி எடுத்து வைத்திருந்தபோதும் விநாயகர் வெண்ணிற ஆடைகளையே உடுத்திக் கொண்டார்.

அதுகண்டு பார்வதி, ''இப்படிப் பட்ட சுபவேளையில் ஏன் வெண்ணிற ஆடைகளை உடுத்திக் கொள்கிறாய்?'' எனக் கேட்க, விநாயகரும் ''வெள்ளை நிறம் தூய்மைக்கும் அறிவு மிக்கதற்கும் எடுத்துக்காட்டு. எனவே வெள்ளைக்கலை உடுத்திக் கொண்டேன்,'' என்றார். பட்டாபிஷேகம் நடந்தது விநாயகர் கணநாதர் ஆனார். ஜெயலட்சுமி என்ற சித்தியையும் வித்தியாவதி என்ற புத்தியையும் அவர் மணந்து கொண்டு இரு மனைவிகளையும் இரு பக்கங்களில் உட்கார வைத்துக் கொண்டார். இதே சமயம் எட்டு திக்குகளிலிருந்தும் அஷ்ட சித்திகள் பெண்கள் உருவில் வந்து மாலைகளை விநாயகருக்கு அணிவித்து மணம் புரிந்து கொண்டார்கள். இதனால் சித்தி விநாயகர் என்ற பெயரும் பெற்றார். அவரது விவாகங்கள் விமரிசையாக நடைபெற்றன.

அதுவரை விநாயகருக்கு விவாகம் நடக்காமல் தடைகள் ஏற்பட்டுக் கொண்டே இருந்தன. ஆனால் ஆயிரம் தடைகள் ஏற்பட்டு முடிந்த பின் அவரது விவாகம் எவ்விதத் தடையும் இல்லாது நடைபெறும் என விஷ்ணுவுக்குத் தெரிந்தது தானே.



நீ நிலைக்கச் செய்!'' என்றார்.

விநாயகரும் மிக்க மகிழ்ச்சி அடைந்தவராய் லட்சுமிதேவியை வணங்கி, ''தாயே! உங்களை என் மடி மீது அமர்த்திக் கொள்ள எவ்வளவு பாக்கியம் செய்தேனோ!'' என்றார். லட்சுமிதேவியும் விநாயகரின் மடி மீது அமர்ந்து கொண்டாள்.

விநாயகர் லட்சுமிதேவியை ஒரு நிலையில் நிறுத்தித் தம் மடி மீது அமர்த்திக் கொண்டது கண்டு விஷ்ணு மட்டும் அல்ல, அங்கிருந்த எல்லா தேவர்களும் ரிஷிகளும் முனிவர்களும் மனம் மகிழ்ந்து போனார்கள். லட்சுமியோடு கூடிய விநாயகரை யாவரும் துதித்தார்கள்.

அப்போது விஷ்ணுவும் ''இப்போது விநாயகர் செல்வ விநாயகர் ஆகிவிட்டார். தாயும் மகனும் ஒன்று சேர்ந்து இருக்கும்போது அவர்களை வணங்குபவர்களுக்கு என்ன குறை?'' என்றார்.

அப்போது நாரதர், ''இந்த விநாயகருக்குதான் எவ்வளவு பெயர்கள் ஏற்பட்டுவிட்டன! சித்தி விநாயகர், செல்வ விநாயகர், கணநாதர், கணபதி இன்னும் எவ்வளவோ?'' என்று கூறித் தன் வீணையை மீட்டி அவரது நாமாவளியைப் பாடி மூன்று லோகங்களிலும் திரிந்து வரலானார்.

ஒருநாள் விநாயகர் தன் வாகனமாக மூஞ்சூறின் மீது அமர்ந்து விந்திய மலைப் பகுதியைத் தாண்டி தென் பகுதியில் ஒரு கருநிற மலைக்கருகே போய் இறங்கினார். அங்கு ஒரே வாழைத் தோட்டமாய் இருந்தது.

விஷ்ணுவும், ''விநாயகா! இனி யார் விவாகம் நடத்தினாலும் உன்னை முதலில் நினைத்து சங்கல்பம் செய்து கொண்டு ஆரம்பிக்கட்டும். உன் பிரசன்ன வதனத்தைப் பார்த்துக் கொண்டே இருக்க இருக்க மன நிறைவு ஏற்படும்,'' என்றார்.

அஷ்ட சித்திகளான பெண்கள் சாமரம் வீச, சிம்மாசனத்தில் கணபதி தாம் மணந்த சித்தி, புத்தி என்ற மனைவிகளுடன் அமர்ந்திருந்தது கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது அப்போது லட்சுமிதேவி முகத்தைச் சுளித்துக் கொண்டு திரும்பிப் போவது கண்டு விஷ்ணு, ''லட்சுமி! போகாதே, நில்! விநாயகா! நீ லட்சுமி தேவியை உன் மடியில் உட்கார வைத்துக் கொள். ஒரு நிலையில் இல்லாமல் ஓடும் லட்சுமியை ஒரே இடத்தில்

மலைவாசிகள் அங்கு தாரை, தப்பட்டைகளை ஒலித்து ஆடிப் பாடிக் கொண்டு இருந்தார்கள்.

விநாயகர் ஓர் அழகிய சிறுவன் உருவில் அவர்களின் முன் போய் நின்றார். மலைவாசிகள் அழகான அச்சிறுவனைப் பார்த்து விட்டு, ''ஆகா! கடவுளே இவனை நமக்கு அனுப்பி இருக்கிறார். இவன் எவ்வளவு அழகாக இருக்கிறான்! கடவுளின் அருளால் கிடைத்த இவனை நாம் அவருக்கே பலியிட்டு அவர் மனதைக் குளிரச் செய்வோம். அப்போது நமக்கு அவரது அருள் கிடைக்கும்,'' என எண்ணி அவனைத் தூக்கிக் கொண்டு போய் விக்கிரகத்தின் முன் நிறுத்தினார்கள்.

அங்கு ஒரு பெரிய வெட்டரிவாள் இருந்தது. ஒரு சிறுவன் அழுது கொண்டு அங்கே நின்று கொண்டிருந்தான். அவனது கழுத்தில் செவ்வரளி மாலை இருந்தது. உடல் முழுவதும் மஞ்சள் பூசப்பட்டு கருப்புத் துணியை அவன் அணிந்திருந்தான்.

சிறுவன் வடிவில் சென்ற விநாயகர் மலைவாசிகளிடம், ''நான் உங்கள் தெய்வத்திடம் சற்று பேச வேண்டும். எனவே என்னை இன்னும் சற்றுப் பக்கத்தில் கொண்டுபோய் விடுங்கள்!'' என்றார்.

அவர்களோ பலமாகச் சிரித்து, ''நீ எங்கள் தெய்வத்துடன் பேசப் போகிறாயா? பயங்கரமாய் கருகருவென இருக்கும். நீ அவரைப் பார்த்தவுடனே பயந்து நினைவு இழந்து விழுந்து விடுவாயே!'' என்றார்கள்.



விநாயகரும் பதிலுக்குச் சிரித்தவாறே, ''உங்கள் தெய்வம் அவ்வாறு இல்லை. நீங்கள் தாம் அவரைப் பற்றி பயங்கரமாகக் கற்பனை செய்து கொண்டு உயிர் பலி கொடுக்கவும் தயாராகிவிட்டீர்கள். உங்கள் தெய்வம் ஒருநாளும் இக்கொடிய செயல்களை விரும்பியது இல்லை. என்னை அவரிடம் பேச விடுங்கள். அவரது உண்மையான உருவத்தை உங்களுக்கு காட்டுகிறேன். அப்போது தான் உண்மை தெரியும். உங்கள் தெய்வம் அழகானவர். இதோ பாருங்கள்!'' எனக் கூறி அந்த விக்கிரகத்தைத் தொட்டுத் தடவ, கருப்பாக இருந்த அச்சிலை வாழைத் தண்டு போலாகியது. கண்களை உருட்டி பயங்கரமாக விளங்கிய அந்த விக்கிரகம் அன்புப் பார்வையுடன் புன்னகை



மலர்களைத் தூவி, பழங்களை அளி யுங்கள். இச்சிறுவனே உங்கள் குரு. இவனே இத்தெய்வத்தைப் பூசித்து வரும் பூசாரியாகவும் இருப்பான். உங்களுக்கு உங்கள் தெய்வம் காட்சி அளிக்கும்,'' எனக் கூறி அங்கிருந்து சென்றார். மலைச் சாதியினர் அவரை வழி அனுப்பினர்.

விநாயகர் ஒரு மலையின் உச்சிக் குப் போனார். அங்கு பைரவர் சிரம் தாழ்த்தி ஏதோ கவலைப்பட்டவாறு அமர்ந்திருப்பதை கண்டார். விநாயகர் அவரைக் கட்டித் தழுவியதும் அவரது கருப்பு நிறம் மறைந்து வெள்ளை நிறமாகிவிட்டது.

அழகிய உருவை அடைந்த பைர வர் சிறுவனான விநாயகரிடம், ''நீ விநாயகன் தானே, உன்னால் தான் என் நிறம் மாறும் என்பது எனக்குத் தெரி யும். நான் பிறந்தபோதே இப்படி அசரீர வாக்கு ஒன்று கூறியது. இந்த மலை மீது துணிந்து யாரும் ஏறி வர வில்லை. என்னைக் கண்டு பட்சி களும் மிருகங்களும் கூட கத்தாமல் இருந்துவிடும். நீ எப்போது வந்து இந்த உருவை எனக்குக் கொடுத்து என்னை தேவனாக்குவாய் என்றே காத்திருந்தேன். இனிமேல் நீ செய்ய வேண்டியது ஒன்றுதான் உள்ளது. நீ உண்மையான உருவில் எனக்குக் காட்சி கொடு!'' என்றார்.

விநாயகரும் தம் உண்மை உருவை காட்டி, ''பைரவரே! இனி மக்கள் உம் மைக் கடவுளாகப் போற்றி வழிபடு வார்கள். சிவனும் விஷ்ணுவும் உம் மிடம் இருப்பதால் உம்மைக் காண

புரிந்தவாறு விளங்கியது. கை நீட்டி விநாயகர் சிறுவனின் தலையைத் தொட்டு ஆசீர்வதித்தார்.

சிறுவனும், ''சுவாமியே சரணம்!'' என்று கூவி, அந்த விக்கிரகத்தை வணங்கினான். கருப்புநிறச் சிலை வெள்ளையாகி, ஊமையாக இருந்த சிறுவன் பேசிய அதிசயம் கண்டு மலைவாசிகள் திகைத்து பயபக்தி யுடன் சிறுவன் வடிவாய் நின்ற விநா யகரை வணங்கித் துதி செய்தார்கள்.

விநாயகரோ, ''என்னை வணங்க வேண்டாம். உங்கள் தெய்வத்தையே வணங்குங்கள். ஆனால் பலி இடு வதை நிறுத்துங்கள். அத்தெய்வம் உங்களைத் தாய், தந்தை, குருவைப் போல காத்து வளர்த்து வழி காட்டும். உங்கள் அன்பைக் காட்ட அவர் மீது




நான் ஆவலுடன் இங்கு வந்தேன். சிவனுக்கும் மோகினி வடிவில் வந்த விஷ்ணுவுக்கும் பிறந்தவர் நீர். எனவே உமக்குக் கருப்பு நிறம் வந்தது. இப்போது வெள்ளை நிறம் வந்து விட்டது. இந்த மலைவாசிகள் உம்மைக் காண விரும்புவதால் ஒரு முறை அவர்களுக்குக் காட்சி அளியும்,'' என்றார்.

பின்னர் விநாயகர் சிறுவன் வடிவில் மலைவாசிகளிடம், ''இப்போது இந்த விக்கிரகத்தை வணங்கி 'சுவாமியே சரணம்!' எனக் கூவுங்கள். உங்கள் தெய்வம் உங்களுக்குக் காட்சி அளிக்கும்,'' என்றார்.

அவர்களும் அவ்வாறே செய்ய அவர்களுக்கு பைரவர் அழகிய உருவில் காட்சி அளித்தார். அவரே தம்மைக் காப்பவர் என்றும் தாம் அழைக்கும்போதெல்லாம் வந்து தம்மை ரட்சிப்பார் எனவும் மலைவாசிகள் நம்பினார்கள். தாரை தப்பட்டைகளை அவர்கள் பலமாக முழக்கி ஆனந்தக் கூத்தாடினார்கள். 'சுவாமியே சரணம்! ஐயனே! அப்பனே!' என்று உரக்கக் கூவி அந்த மலைப் பகுதியே அதிரும்படிச் செய்தார்கள். பைரவரும் அவர்களை ஆசீர்வதித்து மறைய, விநாயகரும் அங்கிருந்து சென்றார். அப்போது முதல் அந்த மலைவாசிகள் பைரவருக்கு உயிர் பலி கொடுப்பதை நிறுத்தி பழங்களைச் சமர்ப்பித்து வரலாயினர். அங்கு ஒரு பெரிய கோவிலைக் கட்டி விமரிசையாக விழாக்கள் நடத்தி வரலானார்கள். இந்த மலைவாசிகள்

சபரர்கள் என்றும் இவர்கள் வாழ்ந்த மலையைச் சபரிமலை என்றும் கூறுகிறார்கள்.

விநாயகர் தாம் இப்படி எல்லாம் செய்தார் என்று மலைவாசிகளுக்குத் தெரியாது. அவர்கள் தாம் வணங்கும் தெய்வமே அப்படி அற்புதங்களை நிகழ்த்தியதாக எண்ணினார்கள். பின்னர் நடந்தது அறிந்து விநாயகரை வழிபட்டார்கள்.

சபரிமலைவாசிகளை நல்வழிப் படுத்திய பின் விநாயகர் தம் வாகனமாகிய மூஞ்சூறின் மீது அமர்ந்து வட திசையில் சென்றார். மலைகளும் பொட்டல் மைதானங்களாக இருந்த அப்பகுதியில் ஆறுகளே இல்லை. அங்கு வாழ்ந்த மக்கள் வானத்தை நம்பியே பயிர் செய்து வந்தார்கள்.

அங்குள்ளவர்கள் ''கங்கை பாயும் பகுதியில் வாழும் மக்கள் தாம் எவ்வளவு புண்ணியம் செய்தவர்கள்! நமக்கு அப்படிப்பட்ட கங்கை இல்லாது போனாலும் அதிலிருந்து ஒரு கிளைநதியாவது வரக்கூடாதா?'' எனக் கூறிப் பெருமூச்சு விட்டுக் கொண்டிருந்தார்கள். இதை விநாயகர் கேட்டுவிட்டார். அவரது மனம் அப்பகுதி மக்கள் தண்ணீருக்காகப் படும்பாட்டை எண்ணி இரங்கியது. அவர்களது நிலப்பரப்பும் கங்கை நதிச் சமவெளி போல இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும் என எண்ணினார்.

இமயமலை அழகிய காடுகள், நீர்வீழ்ச்சிகளோடு காட்சியளிப்பது போல அந்தப் பொட்டல்வெளிகளைப் பச்சைப் பசேலென்ற வயல் வெளிகளாக்கலாம் என எண்ணி மேற்குப் பக்கம் விநாயகர் சென்றார்.

சஹ்யாத்திரி மலையில் கௌதமரின் ஆசிரமம் இருந்தது. அது பச்சைப் பசேலென இருப்பதைக் கண்டார் விநாயகர். அப்போது அவருக்கு ஒரு யோசனை தோன்றவே, உடனே வட திசையில் திரும்பிச் சென்றார். அவர் அப்பகுதியையும் இமயமலைப் பகுதியைப் போலவும் அதன் அடிவாரத்தில் பச்சைப் பசேலென்ற வயல்கள் நிறைந்ததாகவும் ஆக்கத் தீர்மானித்தார். ஆனால் அங்கு போய் பார்த்தபோது அவர் கண்ட காட்சி அவரை மிகவும் திகைக்க வைத்தது.





# வரதட்சணை விவகாரம்

மீனாட்சி தன் அண்ணனின் ஊருக்குப் போய் வந்த பிறகு, தன் கணவர் சோமநாதரிடம், ''என் அண்ணன் நம் மகனுக்கு மணம் செய்து வைக்க ஒரு நல்ல பெண்ணாகத் தேர்ந்து எடுத்திருக்கிறான். அவர்கள் லட்சம் ரூபாய் வரதட்சணை கொடுக்கத் தயாராக இருக்கிறார்களாம். பெண்ணின் நிறம் கருப்பு தான். அதனால் என்ன? லட்சம் ரூபாய் கைக்கு வருகிறதே!'' என்றாள்.

சோமநாதரும் சிரித்தவாறே, ''ஓ! லட்சம் ரூபாய் வரதட்சணை கொடுக்கிறார்கள் என்றால் பெண் கருப்பாக இருந்தாலும் பரவாயில்லை என்று அவளை உன் மகனுக்கு மணம் செய்து வைத்துவிடுவாயா? நீயும் தான் கருப்பாக இருக்கிறாய். உன் தகப்பனார் வரதட்சணை என்று எனக்கு லட்ச ரூபாய் கொடுக்கவில்லையே! அது கிடக்கட்டும், நேற்று குருசாமி என்பவர் நம் வீட்டிற்கு வந்தார். நம் மகன் அவரது மகளை ஒரு திருமணத்தில் பார்த்தானாம். அவன் அவளையே மணக்க விரும்புகிறானாம். அவரது மகளும் நம் மகனையே மணக்க விரும்புகிறாளாம். இந்த வெள்ளிக்கிழமை பெண் பார்க்க வரச் சொல்லியிருக்கிறார். போய் வரலாமா?'' என்று கேட்டார்.

மீனாட்சியோ, ''நன்றாக இருக்கிறதே, கதை! பையனும் பெண்ணும் ஒருவரை மற்றவர் விரும்புகிறார்கள் என்று பெண்ணின் தந்தை கூறுகிறார் என்றால் அவர் ஒரு பைசாக் கூட வரதட்சணை கொடுக்கமாட்டார்

- சிவனார் செல்வன் -

என்பதே பொருள். நான் பெண் பார்க்க இப்போது வரமாட்டேன். நீங்கள் போய்ப் பெண்ணின் தந்தை யிடம் பேசி அவர் லட்சம் ரூபாய் வரதட்சணை கொடுக்கச் சம்மதித் தால் அப்போது போய் நான் பெண் ணைப் பார்க்கிறேன். அவரால் லட் சம் ரூபாய் கொடுக்க முடியாது என் றால் அவரது மகளை நம் மகன் மணம் செய்து கொள்ள மாட்டான் என்று கச்சிதமாகச் சொல்லிவிட்டு வந்து விடுங்கள்!'' என்றாள்.

சோமநாதரும், ''சரி! நான் போய்ப் பார்த்துப் பேசிவிட்டு வருகிறேன்,'' என்று கூறிவிட்டு குருசாமியின் ஊருக்குச் சென்றார். குருசாமியும் அவரை வரவேற்று தம் வீட்டினுள் அழைத்துச் சென்றார். சோமநாதரும் பேச்சை ஆரம்பித்து தன் மனைவி யின் எண்ணத்தைக் கூறினார். அதைக் கேட்ட குருசாமி, ''என்னால் லட்ச ரூபாய் வரதட்சணை கொடுக்க முடியாதே!'' எனவே சோமநாதரும், ''அப்படியானால் உங்கள் மகளுக்கு வேறு யாரையாவது பார்த்துத் திரு மணம் செய்து வையுங்கள்!'' என்று தயை தாட்சண்யம் காட்டாமல் கூறி விட்டு அந்த வீட்டை விட்டு வெளி யேறினார்.

தன் ஊருக்குப் போக ஏதாவது வாடகை வண்டி கிடைக்குமா என்று பார்த்தவாறே சோமநாதர் நடந்து போய்க் கொண்டிருந்தார். அது இரவு வேளை. அந்த ஊர் எல்லையைத் தாண்டும்போது பலத்த மழை பிடித் துக் கொள்ளவே, கண்ணில் தென்





பட்ட ஒரு பழைய வீட்டின் வாசலில் போய் நின்றார். மழை மேலும் வலுக்கவே அவர் அந்த வீட்டு வாசல் கதவைத் தட்டினார்.

கதவைத் திறந்து கொண்டு ஒரு வயதான மனிதர் வரவே, அவரிடம் சோமநாதர், ''இரவில் தங்க இங்கே இடம் கிடைக்குமா? மழை விடாது போலிருக்கிறதே!'' என்றார். அவரும், ''ஆகா! தாராளமாக இருங்கள்,'' என்றார். பிறகு சோமநாதரை வீட்டிற்குள் அழைத்துப் போய் படுத்துக் கொள்ள அவர் ஒரு பாயைக் கொடுத்தார். சோம நாதரும் பாயில் படுத்துக் கொண்டு தன் மகனின் திருமண விஷயமாக அவ்வூர் குருசாமியிடம் பேசியதையும் அவனால் லட்ச ரூபாய் வரதட்சணையாகக் கொடுக்க முடியாததால் அவனது மகளை நிராகரித்துவிட்ட தாயும் விளக்கிக் கூறினார்.

அப்போது கிழவர், ''நான் இப்படித் தனியாக இருப்பதற்குக் காரணமும் வரதட்சணை தான். நானும் என் மகன் திருமணத்திற்குப் பெண்ணைப் பெற்றவர்கள் கண்டிப்பாக வரதட்சணை கொடுத்தே தீர வேண்டும் என்று பிடிவாதமாக இருந்தேன். என் மருமகளின் தந்தை தனக்கிருந்த ஒரே வீட்டை விற்று எனக்கு வரதட்சணையைக் கொடுத்துவிட்டு ஓட்டாண்டி ஆகிவிட்டார். இதனால் என் மருமகள் என் மீது ஆத்திரம் கோபமும் கொண்டு என்னை அலட்சியம் செய்து கொடுமைப்படுத்தலானாள். என் மகன் மனைவிக்கு அடிமையாகிவிட்டான். பிறகு என் மனைவி இறந்துபோகவே, என் பாடு

திண்டாட்டமாகிவிட்டது. என்னைப் பற்றி என் மருமகளும், மகனும் கொஞ்சம் கூடக் கவலைப்படவே இல்லை. அதனால் என் தூரத்து உறவினருக்குச் சொந்தமான இந்தப் பாழடைந்த வீட்டிற்கு வந்துவிட்டேன்,'' என்று கூறினார்.

இதைக் கேட்ட சோமநாதர் மனதில் பெரிய புயலே அடித்தது எனலாம். புரண்டு புரண்டு படுத்தார். காலையானதும் கண்விழித்துப் பார்த்தபோது கிழவர் எங்குமே தென்படவில்லை. அவர் எழுந்து வீட்டு வாசலில் நின்று பார்த்தார். அப்போது ஒரு கிழவி ஆடுகளை ஓட்டிக் கொண்டு அவ்வழியே வந்தாள். பாழடைந்த வீட்டு வாசலில் யாரோ ஒரு புது மனிதர் நிற்பதைப் பார்த்து, ''ஐயா! நீங்கள் யார்? இந்தப் பாழடைந்த வீட்டின் முன் ஏன் நிற்கிறீர்கள்?'' என்று கேட்டாள்.

சோமநாதரும், ''நேற்றிரவு நல்ல மழை பெய்ததால் இந்த வீட்டிற்கு வந்தேன். அப்போது இதில் ஒரு கிழவர் இருந்தார். அவர் என்னை உள்ளே அழைத்துப் போய் படுக்கப் பாய் கொடுத்தார். பிறகு அவர் தாம் வரதட்சணை வாங்கியதால் பட்ட அவதிகளை விவரித்துக் கூறினார்,'' என்றார்.

அதுகேட்டு கிழவி, ''ஓஹோ! நீங்கள் வரதட்சணைப் பேய் வரதனிடம் அகப்பட்டு இரவு முழுவதும் அதனுடனா இந்தப் பாழடைந்த வீட்டில் இருந்தீர்கள்? வரதட்சணைக்கு ஆசைப்பட்டு அதை வாங்கிய பின் பலவித கஷ்டங்களை அனுபவித்து, வீட்டைவிட்டு ஓடிவந்து இங்கு தங்கி இறுதியில் இறந்தே போனான். அதன் பின் பேயாக ஆகித் திரிகிறான்,'' என்றாள்.

சோமநாதர் மனதில் அப்போது திடீர் மாற்றம் ஏற்பட்டது. உடனே ஊருக்குள் போய் குருசாமியிடம், ''எனக்கு வரதட்சணையே வேண்டாம். என் மகனுக்கே உன் மகளைத் திருமணம் செய்து கொடு!'' என்று கூறவே, குருசாமிக்கு ஒரே மகிழ்ச்சி! விரைவில் அத்திருமணம் வெகு விமரிசையாக நடந்தது.





# மனிதர்கள் மூன்று விதம்!

நித்தியானந்தர் தம் குருகுல மாண வர்களுக்கு கற்றுக் கொடுக்கும் சாஸ் திரங்களோடு உலக ஞானமும் இருக்க வேண்டும் என வற்புறுத்தி வந்தார்.

ஒருநாள் காலையில் அவர் தம் சீடர்களில் மூவரை அழைத்துக் கொண்டு மூலிகைகள் எடுத்துவரக் காட்டிற்குச் சென்றார். அவர்களில் இரு சீடர்கள் சில நாட்களுக்கு முன்புதான் குருகுலத்தில் சேர்ந்த வர்கள். அவர்கள் யாவரும் நடந்து போய்க் கொண்டிருக்கையில் புதி தாகச் சேர்ந்த சீடர்களில் ஒருவன் அவ ரிடம், ''சுவாமி! நேற்று தங்களிடம் ஞானி, அஞ்ஞானி, மூடன் ஆகிய இந்த மூவரிடம் காணப்படும் வேற் றுமைகள் யாவை என்று கேட் டேனே! அதற்கு இன்று விளக்கு வதாக கூறினீர்கள். இப்போது அது பற்றிக் கூறுகிறீர்களா?'' என்று பணி வுடன் கேட்டான்.

நித்தியானந்தர் அப்போது மௌன மாக இருந்தார். அப்போது பல வருடங்களாக குருகுலத்தில் இருந்து வரும் சீடன் அந்தப் புதிய சீடனை எரித்துவிடுபவன் போலப் பார்த்து, ''இதோ பார். நம் குருவிற்கு எதை எப்போது எப்படிக் கூற வேண்டும் என்று தெரியும். அதனால் அவர் கூறும்போது கேட்டுக் கொள். சும்மா கேள்விகள் கேட்டு அவரைத் துளைக் காதே!'' என்றான்.

அப்போது மற்ற புதிய சீடன், ''நமது மதிப்பிற்குரிய குரு அவர்கள் நமக்குப் பல விஷயங்களை நன்கு விவரித்துக் கற்பித்து வருகிறார். அவர்

- பாபநாசம் சாமா -



நாம் கேட்கும் சந்தேகங்களுக்கு அநேகமாக உடனேயே நன்கு விளக்கம் கூறி அவற்றைப் போக்குகிறார். சில சமயங்களில் பிறகு விளக்குவதாகக் கூறுவது உண்டு. அப்படி அவர் நேற்றுக் கூறியதால் அதை இன்று நம் நண்பன் அவருக்கு நினைவுபடுத்தி இருக்கிறான். அவ்வளவு தான். இதற்குப் போய் அவனை ஏன் கோபித்துக் கொள்கிறாய்!'' என்று கேட்டான்.

நித்தியானந்தர் சில விஷயங்களை நேருக்குநேராகக் காட்டிப் புரிய வைப்பதும் உண்டு. புதிய சீடனுடைய வினாவிற்கு இந்த முறையில் விடை அளிக்க விரும்பியதால் அவர் உடனே விளக்கவில்லை. குரு மௌனமாக நடக்கவே, மூன்று சீடர்களும் அவர் பின்னாலேயே சென்று மூலிகைகளைச் சேகரிக்கலானார்கள். உச்சி வேளையானதும் அவர்கள் ஓரிடத்தில் அமர்ந்து இளைப்பாறலானார்கள். அப்போது அதே இடத்திற்கு மூன்று வழிப்போக்கர்கள் வந்தார்கள்.

அவர்கள் தம்முடைய பைகளைக் கீழே வைத்துவிட்டுச் சுற்றிலும் பார்த்தார்கள். அவர்கள் பக்கத்திலிருந்த ஒரு மரத்தடியில் இருந்த ஒரு புற்றைப் பார்த்துவிட்டு ஒருவன், ''ஐயோ! அங்கு பார்த்தீர்களா! ஒரு புற்று இருக்கிறது. அதில் பாம்பு இருக்கும். நாம் சற்றுக் கண்ணயர்ந்து விட்டால் அது வெளியே வந்து நம்மைத் தீண்டி விடும்,'' என்றான் பயந்தவாறே.

அதைக் கேட்ட மற்றொரு பயணி, ''நாம் இங்கேயே இளைப்பாறுவோம். ஒரு வேளை புற்றிலிருந்து பாம்பு வெளியே வந்தால் அதை அடித்துக் கொன்றுவிடுவோம்!'' என்றான். அப்போது முதலில் புற்றைப் பார்த்த பயணி, ''ஹூம். நீங்கள் என்ன சொன்னாலும் நான் இங்கே தங்க மாட்டேன். வேறு எங்காவது போய் இளைப்பாறுகிறேன்,'' என்று கூறி, ஓர் அடி எடுத்து வைத்தான்.

அதுவரை பேசாமல் இருந்த மூன்றாவது பயணி, ''அவசரப்பட வேண்டாம். காட்டில் எது ஆபத்தான இடம் அல்லது ஆபத்து இல்லாத இடம் என்பதைக் கூற முடியாது. கூடுமான வரையில் ஆபத்து இல்லாத இடமாகப் பார்த்து இளைப்பாற வேண்டும்,'' என்றான்.

அப்போது முதலாவது பயணி, ''பாம்பு தீண்டுவது ஆபத்தே இல்லையா?'' என்று ஆத்திரப்பட்டுக் கேட்டான். அப்போது மூன்றாவது பயணி, ''நான் அந்தப் பொருள்பட கூறவில்லை!'' என்றான்.

முதலாவது பயணியோ, ''நீ சொல்வது வேடிக்கையாக இருக்கிறதே. கண்ணெதிரே இங்கே பாம்புப் புற்றைப் பார்க்கிறோம். இது ஆபத்தான இடம் இல்லையா?'' என்று கேட்டான்.

அதைக் கேட்ட மூன்றாவது பயணி லேசாக சிரித்து, ''அமைதியாக நான் சொல்வதைக் கேள்! எல்லாப் புற்றிலும் பாம்பு இருக்காது என்பது அனுபவ ஞானம். இது எறும்புப் புற்று தான். பாம்புப் புற்று அல்ல. அந்தப் புற்றின் பக்கத்திலுள்ள மரத்தின் மீது பறவைகள் கூடுகள் கட்டியுள்ளதைக் கவனியுங்கள். அவை பயமின்றி தம் கூடுகளில் முட்டைகள் இட்டுக் குஞ்சுகள் பொரிக்கின்றன. புற்றில் பாம்பு இருந்தால் அந்த முட்டைகளைத் தின்றுவிடும். ஆக பயமின்றி உள்ள அப்பறவைகளைக் கண்டு அந்தப் புற்றில் பாம்பு இல்லை என அறியலாம்,'' என்றான்.

அந்த மூன்று பயணிகள் பேசியதை நித்தியானந்தரும் அவரது மூன்று சீடர்களும் கேட்டார்கள். அப்போது குரு தம் சீடர்களிடம், ''இப்போது புரிந்ததா? இவர்களில் 'பாம்பு வந்தால் அடித்துக் கொல்வோம்!' என்றவன் முட்டாள். பாம்பு அற்ற இடத்திற்குப் போய் இளைப்பாறுவதாகக் கூறியவன் அஞ்ஞானி. ஏனெனில் புற்று இருந்த இடம் ஆபத்தானதா, இல்லையா என்று அவன் யோசிக்கவில்லை. மூன்றாவது பயணி நன்கு யோசித்து அப்புற்றில் பாம்பு இல்லை என்றும் அது ஆபத்தான இடம் இல்லை என்றும் கூறினான். அவன் அறிவுள்ளவன். ஒரு நிலையான முடிவு செய்யும் சக்தி கொண்டவன். இப்போது தெரிந்ததா யார் ஞானி, யார் அஞ்ஞானி, யார் முட்டாள் என்று?'' எனக் கேட்டார்.

மூன்று சீடர்களும், ''ஓ! நீங்கள் இப்பயணிகளைக் கொண்டு விளக்கியதால் நன்கு புரிந்து கொண்டோம்!'' என்று திருப்தியுடன் கூறினார்கள்.





# காரணம் இதுதான்!

ஒருவர் இல்வாழ்க்கையிலிருந்து விடுபட்டு யோகி ஆகி, சொர்க்கத்தை அடைய ஒரு நதிக்கரையில் அமர்ந்து தவம் செய்யலானார். அதே நதிக் கரையில் தவம் செய்ய வந்த ஒரு சன்னியாசி, யோகியைக் கண்டதும் அவருக்குப் பணிவிடைகள் புரிந்து தவம் செய்தால் விரைவில் சொர்க் கத்தை அடையலாம் என்று நினைத் தார். அதனால் அவர் அந்த யோகி யிடம், ''சுவாமி! என்னைத் தங்களது சீடனாக ஏற்றுக் கொள்ளுங்கள். தங் களுக்குப் பணிவிடைகள் செய்து கொண்டே இருப்பேன்,'' என்றார்.

யோகியோ, ''வேண்டாம். எனக்கு யார் உதவியும் தேவை இல்லை. என் தவத்தைக் கலைக்காதே!'' என்று கூறித் தவத்தில் ஆழ்ந்துவிட்டார். சன்னியாசியும் அவருக்குச் சற்று தூரத்தில் அமர்ந்து தவம் செய்ய லானார். யோகியின் தவத்திற்கு இடையூறு செய்ய வந்த மிருகங் களையும் பறவைகளையும் அடித்துத் துரத்தியவாறே தவம் செய்து வந்தார்.

ஒருநாள் இவர்கள் தவம் செய்யும் இடத்திற்கு எதிரில் ஒரு சலவைத் தொழிலாளி வந்து துணிகளைப் 'பட் பட்'டென்று கல்லில் அடித்துத் துவைக்கலானான். இதனால் தவம் செய்து கொண்டிருந்த இருவருக்கும் இடைஞ்சல் ஏற்பட்டது.

தவம் கலைந்த யோகி அவனைக் கடிந்து கொள்ள எண்ணி பிறகு எது வும் கூறாமல் தவத்தில் மூழ்கிவிட் டார். ஆனால் சன்னியாசி சலவைத் தொழிலாளியிடம், ''ஏய்! இங்கே துணி துவைக்காதே! அந்த சத்தம் எங்கள் தவத்தைக் கெடுக்கிறது,'' என்று கத்தினார். சலவைத் தொழி லாளியோ, ''நான் எங்கும் போக மாட்டேன். என் தொழிலைத் தானே செய்கிறேன்?'' என்று கூறித் துணி களைத்துவைத்துக் கொண்டிருந்தான்.

மறுநாளும் அந்த சலவைத் தொழி

- லட்சுமி சங்கர் -

லாளி அதே இடத்திற்கு வந்து துணி களைத் துவைக்கலானான். யோகி தவத்தில் ஆழ்ந்திருந்தார். சன்னியா சியோ அத்தொழிலாளியைத் திட்டி அங்கிருந்து போகச் சொன்னார். ஆனால் அவன் போகாமல் தன் வேலையைச் செய்து கொண்டே இருந்தான். தினமும் சன்னியாசிக் கும் சலவைத் தொழிலாளிக்கும் இடையே வாக்குவாதமும் தகராறும் தொடர்ந்து நடந்து கொண்டிருந்தது.

இப்படியாகப் பல ஆண்டுகள் கழிந்தன. முதலில் சலவைத் தொழி லாளி இறந்தான். அடுத்து சன்னியாசி இறந்தார். இறுதியில் யோகியும் இறந்து போனார். அவரை தேவ தூதன் வந்து சொர்க்கத்திற்கு நரக லோகத்தின் வழியாக அழைத்துச் செல்லலானான். அப்போது அங் கிருந்த சன்னியாசி யோகி சொர்க்கத் திற்குப் போவதைப் பார்த்ததும் அவ ரிடம், ''நானும் உங்கள் பக்கத்தில் அமர்ந்து தானே தவம் செய்தேன். உங்களுக்கும் தினமும் பணிவிடை கள் செய்தேனே! என்னையும் உங் களோடு சொர்க்கத்திற்கு அழைத்துச் செல்லுங்கள்!'' என்று கதறினார். ஆனால் தேவதூதன் சன்னியாசி சொர்க்கத்திற்குப் போக முடியாது என்று கூறி, யோகியை அழைத்துச் சென்றான்.

சொர்க்கத்தில் சலவைத் தொழி லாளி இருப்பதைக் கண்டு ஆச் சரியப்பட்ட யோகி, தேவதூதனிடம் ''துணி துவைத்த இவனுக்கு சொர்க் கம்! என்னோடு அமர்ந்து தவம் செய்த அந்த சன்னியாசிக்கு நரகமா? இது ஏன்?'' என்று கேட்டார்.

தேவதூதனும், ''இந்த சலவைத் தொழிலாளி உங்கள் தவத்தைத் தீவிரப்படுத்த உதவியவன். அவன் ஏற்படுத்திய சத்தத்தால் தானே நீங்கள் ஆழ்ந்த தவத்தில் மூழ்கினீர்கள்? அவன் தன் வேலையைத் தன் கடமை யாகக் கருதி செய்தவன். ஆனால் சன் னியாசியோ தவத்தில் முழு கவனம் செலுத்தாமல் பறவைகளையும் மிரு கங்களையும் அடித்தவர். இத்தொழி லாளியை வேலை செய்ய விடாமல் தடுத்தவர். இக்காரணத்தால் தான் சன்னியாசி நரக லோகத்தில் இருக்க வேண்டியதாயிற்று!'' என்றான்.



# படித்தால் மட்டும் போதுமா?

நிலக்கோட்டை ஜமீன்தாரரின் மகன் நீலமேகம் கல்வி அறிவு உடையவன். ஆனால் தினமும் இரவில் நேரம் கழித்தே வீட்டிற்கு வருவான். அதுவரை அவன் தாயாரும் சமையல்காரன் கிட்டுவும் கண்விழித்துக் காத்திருப்பார்கள். நீலமேகம் சாப்பிட்ட பிறகு தான் அவன் தாயார் சாப்பிடுவாள்.

ஒருநாள் இரவு நீலமேகம் நேரம் கழித்து வந்தபோது கிட்டு ஒரு புத்தகத்தைப் படித்துக் கொண்டிருந்தான். அதைக் கண்ட நீலமேகம் கேலியாக, ''ஓ! நீ படித்துப் பண்டிதராகி எல்லோரும் எப்படி இருக்க வேண்டும் என்று கற்பிக்கப் போகிறாயா?'' என்று பலமாகச் சிரித்துக் கொண்டே கேட்டான்.

அதைக் கேட்ட கிட்டு அமைதியாக, ''படித்தால் மட்டும் போதுமா? உங்கள் தாயாரைப் பாருங்கள். அதிகம் படித்திராது போனாலும் நல்ல பண்பும், அனுபவமும் உடையவர்கள். தம் கணவருக்கு எல்லாப் பணிவிடைகளையும் ஒன்று விடாமல் தினமும் செய்து வருவதோடு உங்களையும் மிகுந்த சிரமங்களுக்கிடையில் அக்கறையுடன் கவனித்துக் கொண்டு வருகிறார்! நாம் அவரது சிரமங்களைக் குறைத்து நல்லவிதமாக நடக்க வேண்டும். இவை யாவும் நீங்களும் நானும் புத்தகங்களைப் படித்துவிட்டால் மட்டும் வந்துவிடாது. அனுபவத்தால் நல்ல பண்புகளைப் பெற வேண்டும்,'' என்றான்.

நீலமேகத்திற்குக் கிட்டு கூறியது மனதில் நன்கு பதிந்தது. அன்று முதல் யாருக்கும் தொல்லை கொடுக்காமல் தன் பழக்கவழக்கங்களை நல்லவிதமாக மாற்றிக் கொண்டான்.



அம்புலிமாமாவின்
அன்பளிப்பு

# வீர தீர பராக்கிரமன்

18

ஓவியம் : பாணி

மலைக் குகைக் கோவிலில் தாந்திரீகன் நாகபந்துவின் யாகத்திற்கு இடைஞ்சல் ஏற்பட்டது. எதிரிகள் தன் யாகத்தின் சக்தியை அடக்க முயல்கிறார்கள் என்று நாகபந்து சந்தேகப்பட்டான். அவன் கருடன் என்று சொன்னதும் நரேந்திரதேவனுக்கு நடுக்கம் ஏற்பட்டது. நரேந்திரதேவனை குகைக் கோவிலுக்குள்ளேயே இருக்கச் சொல்லிவிட்டு நாகபந்து ரவீந்திரதேவனை அழைத்து வர மந்திரவாதியை அனுப்பினான்.

ஆதித்தனைப் பிடிக்க முயன்ற ரவீந்திரதேவனை மந்திரவாதி சாந்தினி நதிக்கரையில் சந்தித்தான்.

இப்போதைக்கு ஆதித்தனை மறந்து போ! உனக்கு அபாயம் என்று தாந்திரீகர் கூறினார். நீ உடனே உன் தந்தை இருக்கும் இடத்திற்குப் போக வேண்டும்.

நான் சந்திரபுரியின் மன்னனாகத் தடையாக ஆதித்தன் தானே இருக்கிறான். சரி, நீ கூறியது போலவே செய்கிறேன்.

மலைக் குகைக் கோவிலுக்குப் போக உடனே ஏற்பாடு செய்யுங்கள்.

உங்களில் சிலர் தலைநகருக்குச் சென்று ஆதித்தன் வந்தால் அவன் அரண்மனைக்குள் செல்லாதபடி தடுத்து நிறுத்துங்கள்.


ஆதித்தன் புதிதாக அமைக்கப்பட்ட குடியிருப்புக்கு வர, மக்கள் அவனை உற்சாகத்துடன் வரவேற்றனர்.
நான் ஒரு நற்செய்தி கொண்டு வந்துள்ளேன்.
மந்திரிக்கு நல்வரவு ஆகுக!
நாங்கள் உங்களைப் பிரிந்து மிகவும் வாடினோம்.
நம் மன்னர் தலைநகருக்குப் போய்க் கொண்டிருக்கிறார். வீரபாகு அவருக்குக் காவலாகச் செல்கிறான். மன்னரைப் பதவியிலிருந்து நீக்க நரேந்திரதேவனும் அவனது மகனும் சதி செய்கிறார்கள். அந்தக் கொடியவர்களிடமிருந்து நம் மன்னரைக் காக்க வேண்டும்.


அங்குள்ள இளைஞர்களுக்கு ஆதித்தன் சில விஷயங்களைக் கூறினான்.
அரண்மனையிலுள்ள துரோகிகளையும் சந்தர்ப்பவாதிகளையும் அடக்க வேண்டும். மன்னர் பத்திரமாக அரண்மனைக்குள் போக வழி செய்ய வேண்டும்.
நம் மன்னருக்காகவும் நாட்டிற்காகவும் எங்கள் உயிரைத் தியாகம் செய்யத் தயாராக இருக்கிறோம்.


ஆதித்தனோடு செல்ல சில இளைஞர்கள் தயாரானார்கள்.
மன்னர் வரும் வழியின் இரு புறங்களிலும் சிலர் காவல் காக்கத் தயரானார்கள்.


ஆதித்தன் இளைஞர்களுடன் அரண்மனைக் கோட்டையை அடைந்தான்.
நில்லுங்கள்! நான் கூறுவதைக் கேளுங்கள்.
தேச விசுவாசிகளை வெளியேற்றிய இந்த அரண்மனையின் வெளிச் செல்லும் வழிகளை எல்லாம் நாம் அடைத்துவிட வேண்டும்.


ரவீந்திரதேவனுக்கு செய்தி அனுப்ப ஆதித்தன் சில இளைஞர்களைத் தேர்ந்தெடுத்தான்.
எதையும் எதிர்க்கும் துணிவுடன் செல்லுங்கள்!
நாங்கள் எப்படியும் அரண்மனைக்குள் புகுந்துவிடுவோம்.
சற்று நேரத்தில் அந்த இளைஞர்கள் அரண்மனைக் காவலதிகாரியுடன் வந்தார்கள்.
ஐயா! சேனாதிபதியும் அவரது மகனும் இப்போது தலைநகரில் இல்லை.
அப்படியானால் நீங்கள் அனைவரும் இப்போதே...


சரணடைந்து கோட்டையை விட்டுப் போக வேண்டும்.
கோட்டைக் காவல் அதிகாரி உள்ளே போய்விட்டு வெளியே வந்தான்.
என் வீரர்களில் அநேகமாக அனைவரும் ஆயுதங்களை ஒப்படைக்கத் தயார்.
எதிர்த்தவர்களை ஆதித்தனின் ஆட்கள் தோற்கடித்துச் சிறைப்பிடித்தார்கள்.
தொடரும்

#  கேளிக்கை நேரம்

## ஆமையை உபசரியுங்கள்

தீரு என்னும் இந்த ஆமைக்கு ஐஸ்கிரீம் பிடிக்கும். அது கிடைக்க குதித்துக் கொண்டிருந்தாலும் அதை அடைய முடியவில்லை. அதற்கு நீங்கள் வழி காண்பியுங்கள்.







## கண்டு பிடியுங்கள்

இந்த இரு படங்களும் பார்ப்பதற்கு ஒன்றுபோல இருந்தாலும் எட்டு அம்சங்களில் மாறுபடுகின்றன. அவற்றைக் கண்டுபிடியுங்கள்.



## காணாமல் போன மீன்கள்

சீனுவுக்கு மீன் மிகவும் பிடிக்கும். ஆனால் அவன் பிடித்த மீன்கள் எல்லாம் இங்கு சிதறிக் கிடக்கின்றன. இப்படத்தைக் கூர்ந்து கவனித்து எவ்வளவு மீன்கள் உள்ளன என்று கூறுங்கள்.




## அம்பின் நிழல்

முயல் ரானுவின் வில்லில் இருந்து இந்த அம்பு எய்யப்பட்டது. கீழேயுள்ள நான்கு நிழல் அம்புகளில் எது இந்த அம்பினுடைய நிழல்?

*(விடைகள் 66ம் பக்கத்தில்)*



வாக்கியம் உருவாக்குங்கள்

# போட்டோ வாக்கியப் போட்டி





**இந்த போட்டோக்களுக்கு ஒவ்வொரு சொல்லாலோ, அல்லது சிறு வாக்கியங்களாலோ தொடர்புடையதாக எழுதி அனுப்புங்கள்.**

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25ந் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/- போட்டி முடிவு நவம்பர் 2002 இதழில் வெளியிடப்படும்.

போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

## வாழ்த்துக்கள்!

ஜூலை 2002 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில் வெற்றி பெற்றவர் :

ஜெ. செண்பகலட்சுமி,
124பி-முனிசிபல் காலனி,
4வது குறுக்குத் தெரு,
மருத்துவக் கல்லூரி சாலை,
தஞ்சாவூர் - 613 007.

பரிசு பெற்ற வாக்கியங்கள்





சிரித்தும் களித்திருக்கும் செல்வம்
சலித்துக் காத்திருக்கும் செல்லம்

கேளிக்கை நேரத்திற்கான விடைகள் (பக்கம் 64)

## கண்டுபிடியுங்கள்

1. சிங்கத்தி...பிடரி
2. வண்டின் இறக்கைகள்
3. மூட்டைப்பூச்சி வடிவம்
4. யானையின் புருவம்
5. ஓநாயின் வால்
6. பூத்தொட்டி
7. பல மலர்கள
8. ஆரம்பப் புழு

## அம்பின் நிழல்

நிழல் நெ.3

## காணாமல் போன மீன்கள்

17 மீன்கள்

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 600 026 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : Viswam

